# மேற்கு வங்க அரசைக்கவிழ்க்க தீவிர முயற்சி!

# சுயாட்சி விவகாரத்தில் மத்திய அரசு தலையீடு!




கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) வார ஏடு

கதிர் 4 ] 18--6--67 20 காசுகள் மலர் 39

## நக்சல்பாரியும் நாடாள்வோரின் நயவஞ்சகமும்!

எந்தப் போலிக் காரணங்களைக் கூறி அன்று நேரு தலைமையில் காங்கிரஸ்காரர்கள் கேரள மந்திரி சபையை திட்டமிட்டுக் கலகஞ் செய்து கவிழ்த்தார்களோ—சட்டமும் ஒழுங்கும் குலைந்துவிட்டது என்று கூறி மத்திய அரசு தலையிட்டு கேரள மந்திரி சபையை டிஸ்மிஸ் செய்ததோ, அதே போல் இன்று வங்கத்தில் அதிகாரிகளைக் குறிப்பாக போலிஸ் அதிகாரிகளைத் தூண்டிவிட்டுத் தாக்கி மக்களிடையே கலவரமும் ஆத்திரமும் உண்டாக செய்து சட்டமும் ஒழுங்கும் குலைந்துவிட்டதாகக் கூறி மத்திய அரசு தலையிடத் தயாராகி வருகிறது.

இந்து சீக்கிய கலகத்தைத் தூண்டி விட்டனர். பின்னர் ஹௌராவில் இந்து—முஸ்லீம் கலவரம்! இப்போது நக்சல்பாரியில் போலீசின் அடங்காபிடாரித் தனமான நடவடிக்கை மூலம் படுகொலை! இத்தனையும் திட்டமிட்ட குறிக்கோளுடன் நடத்தப்பட்டுள்ளன. இதற்குப் பின்னணியாக உள்ள நிகழ்ச்சிகள் என்ன?

வங்கத்தின் வடகோடியில் உள்ள நக்சல்பாரி என்ற பிரதேசத்தில் வசிக்கும் மக்கள் ஆதிவாசிகளாவர். பரம்பரை பரம்பரையாக அங்கு வாழ்ந்து வரும்மககளாவர். அந்நியஉள்நாட்டுத் தோட்ட முதலாளிகள் அங்கு சென்று தோட்டப் பயிர்களை உற்பத்தி செய்ய முன்வந்தனர். இவர்களுக்கு அன்றைய அரசாங்கம் துணை நின்றது.

பன்னெடுங் காலமாகக் குடியிருந்த ஆதிவாசிகளைக் கொஞ்சம் கொஞ்சமாக அங்கிருந்து வெளியேற்றிவிட்டு காப்பி, தேயிலை போன்ற தோட்டப் பயிர்களை சாகுபடி செய்தார்கள். இதை மத்திய உள்துறை அமைச்சர் சவானே ஒப்புக் கொள்ளுகிறார். ஓண்ட வந்த பிடாரி ஊர்ப் பிடாரியை விரட்டியதுபோல் பன்னெடுங் காலமாக வாழ்ந்த ஆதிவாசி மக்களை இந்த நாகரீகமடைந்த நவீன தோட்ட முதலாளிகளும் நிலச்சுவான்தார்களும் விரட்டினார். நிலமெல்லாம் அரசாங்கத்துக்குச் சொந்தம் என்றும் அவைகளை தோட்டச் சாகுபடிக்கு விடப்பட்டுள்ளது என்றும் அதே சமயத்தில் ஆதிவாசி மக்களை அங்கிருந்து விரட்டக்கூடாது என்றும் முன்னாள் காங்கிரஸ் அரசாங்கம் ஒப்புக்குக் கூறிவந்தது. இதன் நடைமுறை என்னவென்றால் தோட்டச் சாகுபடிக்குக் கொடுத்தவுடன் முதலாளிகள் சும்மாயிருப்பார்களா? தங்களுக்கு வேண்டியவர்களை வைத்துக் கொண்டார்கள். வேண்டாதவர்களை விரட்டினார்கள்.

இந்த நிலவெளியேற்றம் தங்குதடையின்றி நடைபெற்று வந்தது என்பதையும் சவான் ஒப்புக்கொள்ளுகிறார். எத்தனை நாளைக்கு ஆதிவாசி மக்கள் இதைச் சகித்துக் கொள்ள முடியும்? இதுதான் கேள்வி.

விவசாய சங்கம் அமைத்தார்கள். நிலவெளியேற்றத்தை எதிர்த்து வெகுகாலமாக போராடி வருகிறார்கள். இன்று நிகழ்ந்ததென்ன? புத்திமான் தீர்க்கி என்ற ஜோட்டிதரர் (மேல் வாரதர்) சாகுபடிதாரரான குடிஉரிமை பெற்ற பிகூர் கிசான் மீதுமுன் சீப்கோர்ட்டில் வழக்காடினார். பிகூர் கிசான் தான் குடிவார பாத்தியமுடையவர் என்று கோர்ட் தீர்ப்பளித்தது. காரணம் அவர் பன்னெடுங்காலமாக அந்த நிலத்தில் இருந்து வருபவர் என்பதினால். இந்த உத்தரவுடன் அந்த விவசாயி தன் நிலத்தைத் தொடர்ந்து சாகுபடி செய்தார்.

ஆனால் ஜோட்டிதார் புத்திமான் தீர்க்கி இதைச் சகித்துக் கொள்ளவில்லை. தன்னுடைய அடியாட்களைத் திரட்டினார். பீகூர் கிசானை அடித்து நொறுக்கி நிலத்திலிருந்து விரட்டினார். சட்டத்துக்குக் கட்டுப்பட மறுத்த புத்திமான் குண்டர்களைக் கொண்டு தன் ஆதிக்கத்தை நிலைநாட்டினார். இதுதான நக்சல்பாரி நிகழ்ச்சிகளுக்கு ஆரம்ப வித்து. இதே போல பல நிகழ்ச்சிகள் நடந்தன. விவசாயிகளிடம் கொதிப்பு ஏற்பட்டது. முறையான கிளர்ச்சியும் வெடித்தது. பலரைக் கைது செய்ய போலீஸ் வாரண்டுகள் பிறப்பிக்கப்பட்டன.

இந்த நிலைமையில் நிலவருவாய்த்துறை அமைச்சர் கோனார் ஸ்தலத்துக்குச் சென்று சம்பந்தப்பட்டவர்களுடன் பேச்சு நடத்தி ஒரு சுமூகமான தீர்வுகாண அடிப்படையை உருவாக்கினார். அங்கிருந்த போலீஸ் சூப்பரின்டெண்டும் பிடிவாரண்டுகளை வாபஸ் பெறுவதாக அறிவித்தார். கெடுபிடி நிலையும் மாறியது.

இந்தக் கட்டத்தில் தான் கடும் நடவடிக்கைகள் எடுக்க வேண்டும் என்று தலைமை போலீஸ் அதிகாரியான வங்க இன்ஸ்பெக்டர்ஜெனரல் உத்தரவிட்டதாக தெரிய வருகிறது. அதன் பேரில் ஸ்தல போலீஸ் சூப்பரின்டென்ட் ஸ்தலத்துக்கு போலீஸ்படையுடன் சென்றார். ஆறு பெண்கள் இரு குழந்தைகள் உட்பட 10 பேர் கொல்லப்பட்டனர்.

இன்ஸ்பெக்டர் ஜெனரலின் உத்தரவுக்குப் பொறுப்பாளி யார்? எந்த உத்தரவையும் முதலமைச்சருக்குத் தெரியாமல் தான் விடுவதில்லை என்று இன்ஸ்பெக்டர்ஜெனரல் கூறிக் கொள்ளுகிறார். ஆனால் திரைமறைவில் நடந்தது அவ்வளவு தானா? மத்திய அரசுக்கும் இன்ஸ்பெக்டர் ஜெனரலுக்கும் உள்ள தொடர்பு என்ன? ஒரு வங்கஅமைச்சரே தோழர் கோனார் அவர்களே பிரச்சினையைத் தீர்க்க வழிதேடியுள்ள ஒரு கட்டத்தில் போலீஸ் குறுக்கீடு அவசியமில்லாத கட்டத்தில் ஏன் அங்கு போலீசை அனுப்பினார்கள்? இதுவும் விசாரித்து உண்மை காண வேண்டிய ஒரு விஷயம். ஆனால் ஒன்றுமட்டும் தெளிவு.

உள்துறை அமைச்சர் சவான் மேற்கு வங்கத்துக்குச் சென்று வந்தான். அங்குள்ள அதிகாரிகளின் போக்கில் கணிசமான மாறுதல் ஏற்பட்டுள்ளது என்பதற்கு ஹௌரா நிகழ்ச்சி உட்பட பல நிகழ்ச்சிகள் எடுத்துக் காட்டுகின்றன.

மத்திய அரசின் உளவு இலாகா வங்க அரசின் ஒவ்வொரு நடவடிக்கையையும் அதன் நிர்வாகத்தையும் கண்காணித்து வருகிறது என்பதை சவான் மறைமுகமாக நாடாளுமன்றத்தில் ஒப்புக் கொள்ளுகிறார்.

நக்சல்பாரி சம்பவத்தைப் பற்றி சவான் மத்திய அரசின் சாதனங்கள் மூலம் கிடைத்த தகவல்களின் அடிப்படையில் பேசுவதாகவும் குறிப்பிட்டிருக்கிறார். அதாவது வங்க அரசாங்கத்தை நம்பாமல் சட்டம், ஒழுங்கு சம்பந்தப்பட்ட ஒரு விஷயத்தில் வங்கத்தில் மத்திய அரசாங்கம் நேரிடையாகத் தலையிட்டு கண்காணிக் செய்துள்ளது அம்பலமாகும் விஷயத்தை ஏற்பாடு (5ம் பக்கம் பார்க்க)

## அமெரிக்க உளவு இலாகாவிலிருந்து பணம் வாங்கியது யார்?

### இந்திய ஏஜெண்டுகள் அம்பலமாகிறார்கள்!

தேர்தலில் அமெரிக்க உளவு இலாகா இந்திய நாட்டிலுள்ள எந்தெந்தக் கட்சிகளுக்கு பணம் வழங்கியது என்று பாராளுமன்றத்தில் எழுந்த கேள்வியின் படி விசாரணை செய்வதற்காகக் கோரப்பட்ட இந்தியத் துப்பறியும் இலாகா தன்னுடைய இடைக்கால அறிக்கை ஒன்றை வெளியிட்டிருக்கிறது. அந்த அறிக்கையின் விவரம் அமெரிக்காவிலுள்ள ''நியூயார்க் டைம்சில்'' வெளியாகியிருக்கிறது. ''நியூயார்க் டைம்ஸ்'' பத்திரிகையில் வெளியான இந்திய துப்பறியும் இலாகா அறிக்கைப்படி ஜனசங்கத்துக்கும் சுதந்திரா கட்சிக்கும் பி.சோ. கட்சிக்கும் அமெரிக்க உளவு இலாகா தேர்தலுக்காக தாராளமாகப் பணம் வழங்கியது என்ற உண்மை வெளியாகியுள்ளது.

இந்தியன் எக்ஸ்பிரஸில் ஜூன் 15-ம் நாள் வெளியான செய்தியின் விபரங்கள் இவை.

இதை மறுத்து ஜனசங்கத் தலைவர் வாஜ்பாயும் பி.சோ. தலைவர் பிரேம் பாசும் சுதந்திரா கட்சியின் நிர்வாகக் கமிட்டியும் அறிக்கைகள் விடுத்துள்ளார்கள். அமெரிக்க உளவு இலாகாவிடமிருந்து தாங்கள் பணம் வாங்கவே இல்லை என்று சத்தியம் செய்கிறார்கள்.

பகிரங்க விசாரணைக்குத் தயார் என்றும் பி.சோ. பிரதிநிதி கூறுகிறார். ஆனால் சுதந்திரா கட்சி நிர்வாகக் கமிட்டி இந்த நாட்டிலுள்ள தமது ஆதரவாளர்கள் அனுதாபிகளிடமிருந்தே பணம் பெற்றதாகக் கூறுகிறது. யார் அந்த ஆதரவாளர்கள், அந்த ஆதரவாளர்களுக்கும் அமெரிக்க உளவு இலாகாவிற்குமுள்ள உறவு என்ன? சரியான பதில் இல்லை.

### நமது கேள்வி:

இந்திய அரசாங்கத் துப்பறியும் இலாகாவின் இடைக்கால அறிக்கை இந்தியாவில் வெளியாகாமல் ''நியூயார்க் டைம்ஸில்'' வெளியான காரணம் என்ன? இந்திய துப்பறியும் இலாகாவுக்கும் நியூயார்க் டைம்ஸுக்கும் உள்ள நெருங்கிய உறவு என்ன? இந்தியாவின் சுதந்திரத்தைப் பற்றி பெரிதாகப் பேசும் சாவன் இதற்கு என்ன பதில் கூறுகிறார்? நேர்மையிருந்தால் சுதந்திரா, ஜனசங்கம், பி.சோ. கட்சிகளின் தேச விரோதச் செயல்களை மூடி மறைக்கும் நோக்கம் இல்லையென்றால் தனது துப்பறியும் இலாகாவின் இடைக்கால அறிக்கையையும் அது சம்பந்தப்பட்ட சகல விவரங்களையும் உடனே வெளியிடுவாரா?



## ஆக்கிரமிப்பாளர்களும் அவர் தம் ஆதரவாளர்களும்

சின்னஞ்சிறு நாடு இஸ்ரேல். அதை பத்து பன்னிரெண்டு அரபு நாடுகள் எல்லாம் சேர்ந்து கொண்டு அழிக்கப் பார்க்கின்றன. இப்படிச் செய்யலாமா என்று அனுதாபத்தோடு பேசியவர்கள் மத்தியகிழக்கு ஆசியாவில் நடந்து முடிந்த இஸ்ரேலின் ஆக்கிரமிப்பு யுத்தத்திற்குப் பிறகு தங்களுடைய கருத்துக்களை மாற்றி கொள்ளுவார்கள் என்று நம்புகிறோம்.

மூன்றே நாட்களில் ஜனத்தொகையில் பரப்பளவில் பெரிய நாடுகளான பல அரபு நாடுகள் மீது மின்னல்வேக ஆக்கிரமிப்பு யுத்தம் நடத்தி பல பிரதேசங்களைக் கைப்பற்றி கொண்டுள்ளது இஸ்ரேல்.

இஸ்ரேல் மட்டும் இந்த யுத்தத்தில் ஈடுபட்டிருந்தால் நிச்சயமாக அது வெற்றி கண்டிருக்க முடியாது. மேற்கத்திய ஏகாதிபத்திய பகற்கொள்ளைக் கூட்டத்தினர் இஸ்ரேலை பாதுகாக்க என்னென்ன சதித்திட்டங்களில் இறங்கினார்கள் என்பது இப்போது ஒன்றன் பின் ஒன்றாக அம்பலமாகி வருகின்றன.

மத்திய தரைக்கடலிலும் செங்கடலிலும், அரபிக்கடலிலும் தங்களது கப்பல் படைகளைக் கொண்டுவந்து குவித்தார்கள். அவைகளிலிருந்து ஆகாய விமானங்களை இஸ்ரேலுக்கும் மறைமுகமாகக் கொடுத்தனர். இஸ்ரேல் மீது எதிர்தரப்பு விமானங்கள் பறக்காமல் தடுத்து இஸ்ரேல் விமானங்கள் எகிப்து, சிரியா, ஜோர்டன் ஆகிய நாடுகள் மீது திடீர் ஆக்கிரமிப்புத் தாக்குதல் நடத்தி அவைகளின் ராணுவங்களையும் விமானங்களையும் அழிக்க உதவினார்கள். இந்த உண்மையை யுத்தம் நடந்து கொண்டிருந்த சமயத்திலேயே எகிப்தும், ஜோர்டனும், சிரியாவும் உலகுக்கு எடுத்துக் கூறியும் கூட அன்று அராபியர்களின் நண்பர்கள் என்று சொல்லிக்கொண்ட சிலர் இதை ஒப்புக்கொள்ளவில்லை. அராபிய நாடுகளின் பல வீனத்தை மறைப்பதற்காகக் கூறப்படும் அபாண்டம் என்று கூட பல பத்திரிகைகள் எழுதின.

இன்று அமெரிக்க, பிரிட்டிஷ் விமானங்கள் இஸ்ரேலுக்கு உதவின என்பதை எல்லோரும் ஒப்புக்கொள்ள முன்வந்திருக்கிறார்கள். ஆக்கிரமிப்புக்குள்ளான அராபிய மக்களுக்கு உலகெங்குமுள்ள சுதந்திரம் விரும்பும் மக்களின் ஆதரவு உண்டு என்பதற்கு இன்று மக்கள் சீனம் எகிப்துக்கு உணவும், தங்கள் நாட்டைப் பாதுகாத்துக் கொள்ள ஆயுதமும் கொடுக்க முன்வந்திருப்பது ஓர் உதாரணம்.

இஸ்ரேலை ஆளும் முதலாளித்துவக் கூட்டம் அமெரிக்க, பிரிட்டிஷ் முதலாளிகளின் கையாட்களாவர். இஸ்ரேல் நாட்டின் சுதந்திரத்தைப் பாதுகாத்துக் கொள்ள விரும்பியவர்களாக அவர்கள் இருந்தால் அமெரிக்க பிரிட்டிஷ் முதலாளிகளின் ஏவல் நாய்களை போன்று செயல்படமாட்டார்கள். அராபிய மக்களைத் தொடர்ந்து எதிர்த்துக் கொண்டிருக்க நினைக்கமாட்டார்கள்.

இஸ்ரேல் உருவாக்கப்பட்ட காலத்தில் அங்கிருந்து வெளியேற்றப்பட்ட 2 லட்சம் அராபிய அகதிகளின் பிரச்னையை சுமுகமாகத் தீர்த்து அராபிய நாடுகளுடன் ஒரு நேச உறவை ஏற்படுத்திக் கொள்ள முன்வந்திருப்பார்கள். ஆனால் இஸ்ரேலை ஆட்சிபுரியும் முதலாளி வர்க்கம் தங்கள் நாட்டை ஒரு மதவெறியின் அடிப்படையிலேயே முஸ்லீம் மக்களுக்கு எதிரான அடிப்படையிலேயே உருவாக்கி என்றும் அராபிய நாடுகளின் எதிரியாகவே தங்களைப் பாவித்து நடவடிக்கை எடுத்து வந்தார்கள்.

இஸ்ரேல் உருவான காலத்திலும் அண்டை நாடுகள் மீது போர் தொடுத்தது இஸ்ரேலின் முதலாளித்துவக் கூட்டம் போதிய இடம்பிடிப்பதற்காக. பின்னர் 1955-ல் பிரிட்டன், பிரான்சுடன் சேர்ந்து கொண்டு அண்டை நாடுகளைத் தாக்கியது. இப்போது அதே ஆக்கிரமிப்பு போரை அமெரிக்கா, பிரிட்டனின் ஆதரவுடன் நடத்தியுள்ளது.

அமெரிக்காவும் பிரிட்டனும் இஸ்ரேலைத் தங்கள் ஏவல் நாயாகப் பயன்படுத்தக் காரணம் அராபிய நாடுகளை மிரட்டி அவைகளின் எண்ணெய் வளத்தைப் பயன்படுத்திக் கொள்ளுவதற்கே. இத்தகைய ஆக்கிரமிப்பு பின்னணியைக் கொண்ட இஸ்ரேலுக்கு ஏகாதிபத்தியக் கைப்பாவையான இந்த இஸ்ரேலுக்கு இந்திய நாட்டிலுள்ள சில கட்சிகள் ஆதரவும் அனுதாபமும் காட்ட முன்வருகிறார்கள் என்றால் அதற்குக் காரணம் என்ன?

சுதந்திரா கட்சியும், ஜனசங்கமும் அராபிய நாடுகளுக்கு இந்தியா அனுதாபம் காட்டக் கூடாது என்று கூக்குரலிடுகிறார்கள். இவ்வாறு ஆதரவு தெரிவித்தால் நமது நடு நிலைமைக் கொள்கை பாதிக்கும் என்றும் நடு நிலைமை வேஷம் போட முன்வந்துள்ளார்கள்.

நடு நிலைமைக் கொள்கையைக் கிண்டல் செய்தும் அமெரிக்காவுடன் ராணுவக் கூட்டணி வகுக்க வேண்டும் என்று கோரியும் சென்ற காலத்தில் கோஷமிட்ட இந்தக் கட்சிகளின் தலைவர்கள் இன்று நடு நிலைமை பற்றி பேச முன்வந்திருப்பது விசித்திரமே! இவர்கள் நடு நிலைமை வேஷம் போடுவதற்குக் காரணம் உண்டு. இஸ்ரேலின் பின்னணியில் அமெரிக்கா இருப்பது தான் அந்த காரணம். அமெரிக்க ஏகாதிபத்தியத்தின் ஆக்கிரமிப்புக் கொள்கைகளை எதிர்க்கும் எந்தப்பாரம்பரியமும் இந்தக் கட்சிகளுக்குக் கிடையாது என்பதையும் நம் நாட்டின் சுதந்திரத்தை அமெரிக்கர்களுக்கு விலைபேச இவர்கள் தயங்கமாட்டார்கள் என்பதையும் ஏகாதிபத்தியக் கையாளான இஸ்ரேலைக் கண்டிக்கக் கூடாது என்று இவர்கள் பேச முன்வந்ததிலிருந்து அம்பலமாகிறது.

இதேபோல அமெரிக்காவின் ஆக்கிரமிப்புச் சாகசங்களையும் சதிகளையும் எதிர்க்கக் கூடாது என்று கூறுவதில் பிரஜா சோஷலிஸ்ட் கட்சியும் முன் வந்துள்ளது. மற்றொரு விசித்திரமான ஆலோசனையை எஸ். எஸ்.பியின் தலைவரான டாக்டர் லோகியா கூறுகிறார். ஆக்கிரமிப்பாளனான இஸ்ரேலும் ஆக்கிரமிப்புக்குள்ளான அராபிய நாடுகளும் சேர்ந்து மத்திய கிழக்கு பிரதேசம் எல்லாவற்றிலும் ஒரு கூட்டு சம்மேளன ஆட்சி ஏற்படுத்திவிட்டால் பிரச்னை தீர்ந்துவிடும் என்கிறார் ஆகவே இந்தியா இவ்விஷயத்தில் நடு நிலைமை வகிப்பதே விவேகம் என்பது அவருடைய புத்திமதி.

அதன் பொருள் என்ன? இன்று இஸ்ரேலின் ஆக்கிரமிப்புச் செயல்களையும் அதன் பின்னால் நிற்கக் கூடிய அமெரிக்க ஆக்கிரமிப்புச் சதிகளையும் இந்தியா எதிர்க்கக் கூடாது கண்டிக்கக் கூடாது என்பதுதான் பிரிட்டிஷ் ஏகாதிபத்தியத்தை எதிர்த்து நம் நாட்டுச் சுதந்திரத்துக்ககாகப் போராடிய பரம்பரையைப் பற்றி அடிக்கடி பேசிக் கொள்ளும் இந்தக் கட்சிகளுக்கு இன்று ஏகாதிபத்திய எதிர்ப்பு உணர்ச்சி லவலேசமும் இல்லாமல் போனது பரிதாபத்துக்குரியதாகும். கொலை வெறியர்களான ஏகாதிபத்திய ஜான்சனுடனும் சோஷலிசம் பேசிக் கொண்டு பிற நாடுகளை அடிமைப் படுத்திக் கொண்டிருக்கும் பிரிட்டிஷ் தொழில் கட்சி வில்சனுடனும் அப்பட்டமான இனவெறி பிடித்த ஆக்கிரமிப்பாளர்களான இஸ்ரேலிய முதலாளிவர்க்க ஆளும் கூட்டத்துடனும் நம் நாட்டு சோஷலிஸ்டுகள் கை கோர்த்து நிற்பது விசித்திரமான நிலைமை! தங்களை ஏகாதிபத்திய எதிர்ப்பு பாரம்பர்யமுள்ள சோஷலிஸ்டுகள் என்று சொல்லிக்கொள்ள அருகதையுள்ள போக்குத்தானா இது என்று வினவுகிறோம்.

இந்திய நாட்டின் சுதந்திரத்தை நேசிக்கும் ஒவ்வொரு தேசபக்தனும் நம் நாட்டின் அருகாமையில் நடக்கும் ஏகாதிபத்தியச் சதிகளை எதிர்க்கத் தயங்கமாட்டான். அமெரிக்க, பிரிட்டிஷ் அணுகுண்டுகளைக் கண்டு மயங்கமாட்டான். ஏகாதிபத்தியத் தாக்குதலுக்கு இரையாகியுள்ள அராபிய மக்களுக்கு ஆதரவு கொடுக்காத ஒரு இந்தியன் தன்னை தேசபக்தன், ஏகாதிபத்திய எதிர்ப்புப் பாரம்பரியம் உள்ளவன் என்று கூறி கொள்ள அருகதையற்றவனாவான்.

# வர்க்க சமசரப் பாதையில் படு கேவல வீழ்ச்சி!

(7ம் பக்கத் தொடர்ச்சி)

டத்தில் அமைக்க விரும்பும் அதே வர்க்க லட்சியங்களையும், பிணைப்புக்களையும் உருவாக்குவதை நோக்கமாகக் கொண்டதே. வரும்போராட்டம் காங்கிரஸ் கட்சிக்கு மட்டும் எதிரானதல்ல. அரசைக் கட்டுப்படுத்தும் பெருமுதலாளி வர்க்க—நிலப்பிரபுத்துவக் கூட்டத்துக்கும் எதிரானதுமாகும். ஆகவே பெருமுதலாளிகளுக்கும், நிலப்பிரபுக்களுக்கும் விசுவாசம் செலுத்தும் எல்லா கட்சிகளையும் தனிமைப்படுத்துவது அவசியமாகும்.

''இந்தக் கட்சிகளுடன் தீண்டாமை இல்லை'' என்ற மந்திரம் தத்துவார்த்த ரீதியாகவும், அரசியல் ரீதியாகவும் போராடுவதாகப் பாசாங்கு செய்துகொண்டு இந்தக் கட்சிகளுடன் சேர்ந்துகொள்ளும் நாடாளுமன்ற கூட்டுக்கான போர்வையேயாகும்.

### போல்ஷ்விக்குகள் செய்ததென்ன?

இந்த யுக்திகளை லெனின் கிரிமினல் குற்றம் என்று வர்ணித்திருக்கிறார். ''டூமாவில் (நாடாளுமன்றத்தில்) கட்சிகளைப் பிரித்துக் காட்டுவதும் முதலாளி வர்க்கம் மறைத்து வைக்கும் கட்சிகளின்வேர்களை அம்பலப்படுத்துவதுமே நம் வேலை. வெவ்வேறு கட்சிகளின் வர்க்கத் தன்மை பற்றிய முழு உண்மையையும் மென்ஷ்விக்குகள் நாடாளுமன்றத்தில் வெளிப்படுத்தமாட்டார்கள்'' என்று லெனின் கூறியுள்ளார். நம் நாட்டுத் திரிபுவாதிகள்கூறும் மத்தியில் காங்கிரசல்லாத அரசாங்கக் கோஷம் வர்க்கக் கூட்டுக்கான கோஷமாகும். சந்தர்ப்பவாதக் கூட்டுக்காக பிற்போக்குக் கட்சிகளைக் கூட அமைச்சரவையில் சேர்த்துக் கொள்ள அவர்கள் தயார். நாடாளுமன்றத்தில் பெருமுதலாளித்துவ – நிலப்பிரபுத்துவ மாற்று கட்சிகளுக்கு எதிரான போராட்டத்தை அவர்கள் கைவிட்டு விட்டனர். நாடாளுமன்ற அரங்கிலிருந்து இந்தக் கட்சிகளின் முகமூடிகளை கிழித்து அவர்களின் வர்க்கத் தன்மையை எடுத்து காட்டும் பணியை அவர்கள் விட்டு விட்டனர். முடிவில் தற்போதைய புரட்சிகர காலகட்டத்தின் சகாப்தத்தை எவ்வாறு புரிந்து கொள்கிறார்கள்? தேசிய முதலாளிவர்க்கத்துடன் கூட்டு சேர்ந்து அரசாங்கத்தில் அதிகாரத்தைப் பகிர்ந்து கொள்ளுவதற்கான வாய்ப்பளிக்கும் காலகட்டமாகவே அவர்கள் பார்க்கின்றனர்.

இந்தச் சரணாகதி நிலை நாடாளுமன்றத்திலும் வெளியிலும் இடதுசாரி சக்திகளை ஸ்திரப்படுத்துவதைச் சீர்குலைக்கிறது. வர்க்க லட்சியம் இருந்தால் தான்—காங்கிரசை முறியடித்து உடைமை வர்க்கங்களின் மற்ற இருகட்சிகளையும் தனிமைப் படுத்தி, மத்தியில் உண்மையான ஜனநாயக மாற்று அரசாங்கத்தை அமைக்கும் திசை வழியில் செல்லமுடியும். இவ்வாறுஜனநாயக சக்திகளைப் பலப்படுத்தும் லட்சியம் இருந்தால்தான் இடதுசாரி சக்திகளின் ஐக்கியத்துக்குப் பொருளுண்டு.

திரிபுவாதிகளின் சரணாகதி நிலையால் மற்ற இடதுசாரி கட்சிகளின் ஊசலாட்டமும் அதிகரிக்கிறது. அவர்களது வர்க்க மற்ற கருத்துக்களும் பலப்படுகின்றன.

ஐக்கிய முன்னணியைச் சீர்குலைப்பதற்கு பிற்போக்காளருக்கும் காங்கிரசுக்கும் வசதி அளிக்கிறது. ஜனநாயகக் கட்சிகளில் சில—உதாரணமாக சம்யுக்த சோஷலிஸ்ட் கட்சி சுதந்திராவையும் ஜனசங்கத்தையும் கூட்டில் வரவேற்கத் தயாராக இருக்கின்றன. லட்சியத்திலும், அணுகும் முறையிலும் நாணய முடையவைகளாக இருப்பதால் இந்தக் கட்சி ''குறைந்த பட்சத்திட்டம்'' அல்லது ''தீண்டாமை இல்லை'' என்ற போர்வைகளை அணிந்துகொள்ளவில்லை. திரிபுவாதிகளின் நிலை சம்யுக்த சோஷலிஸ்ட் கட்சியை சுதந்

(4ம் பக்கம் பார்க்க)

# சுதந்திரா ஜனசங்க கட்சிகளுடன் கூட்டுசேர

# திரிபுவாதிகளின் புது முயற்சி!

பி. டி. ரணதிவே

கல்கத்தாவில் கூடிய திரிபுவாதிகளின் தேசியக் கவுன்சில் நிறைவேற்றிய தீர்மானத்தின் மீது நாம் செய்த விமர்சனத்துக்கு, அவர்கள் பதிலளிக்க முயன்றுள்ளார்கள். சுதந்திரா, ஜனசங்கத்திடம் தீண்டாமை கிடையாது என்ற கோஷத்தின் அடிப்படையில் மத்தியில் "கூட்டு அரசாங்கம்" என்ற கோஷத்தை நியாயப்படுத்த அவர்கள் முயன்றுள்ளார்கள்.

வார்த்தை ஜாலங்களையெல்லாம் நீக்கிவிட்டுப்பார்த்தால் தற்போதைய திட்டவட்டமான நிலைமைக்குத் தகுந்த உடனடிக் கோஷமாக அதாவது சமாதானமுறையில்—பார்லிமென்டரி முறையில் வைத்துள்ள அவர்களது நம்பிக்கையையும் சுதந்திரா ஜனசங்கம் போன்ற பிற்போக்கு முதலாளி வர்க்க கூட்டத்துடன் வர்க்கக் கூட்டை விரும்புவதையும் அவர்களுடைய தேசியக் கவுன்சில் தீர்மானம் வற்புறுத்துகிறது.

இப்படிக் கூறும்போது திரிபுவாதிகள் ஆத்திரமடைவார்கள். நாம் திரித்துக் கூறுவதாகச் சொல்லுவார்கள். நாங்கள் மக்கள் இயக்கத்தை வற்புறுத்தவில்லையா என்றும் கேட்பார்கள். சந்தர்ப்பவாத அமைச்சரவை அமைப்பு உபாயங்களை எதிர்த்து விளக்கக் கட்டுரை வெளியிட வில்லையா என்றும் கேட்பார்கள்.

ஆனால் ஒரு தனி நபரிடமிருந்தோ அல்லது ஒரு கட்சியிடமிருந்தோ வாய்ப்பறையைவிட அதிகமாக கடும் சோதனையை மார்க்சிசம்-லெனினிசம் கோருகிறது. குறிப்பிட்டதொரு நிலைமையைப் பற்றிய ஒருகட்சியின் வர்க்கக் கணிப்பு, அக்கட்சி சார்ந்திருக்கும் சக்திகளின் அடிப்படையை வைத்தே அது பின்பற்றுவதாகக் கூறிக்கொள்ளும் புரட்சிகர நிலையைப் பற்றி தீர்மானிக்கப்படுகிறது.

### திரிபுவாதிகள் சார்பு

இந்த காலகட்டத்தில் தம்முடைய மையமான கோஷத்தை நிறைவேற்றுவதற்கு திரிபுவாதிகள் யாரைச்சார்ந்துள்ளார்கள்? அவர்களுடைய தீர்மானம் கூறுகிறது: "பிற்போக்குக் கட்சிகள் வலதுசாரி பிற்போக்குக் கூட்டு அரசாங்கத்தை அமைக்க முயன்று வரும்போது இடைக்காலத்தில் மத்தியில் காங்கிரசல்லாத ஜனநாயகக் கூட்டு அரசாங்கத்தை அமைத்து இந்த உபாயத்தை முறியடிக்கும் சாத்தியம் எழுந்துள்ளது."

பார்லிமென்டரி கூட்டுகளின் மூலமாக மட்டுமே இவர்கள் இந்தச் சாத்தியப் பர்ட்டினை எதிர்பார்க்கிறார்கள் என்பது தெளிவு. அதில் சந்தேகம் இருந்தால் தீர்மானத்தின் மீது பூபேஷ்குப்தா விளக்கி எழுதிய கட்டுரை கூறுவதைப் பார்க்கலாம் "பிளவுகள் அல்லது உபதேர்தல் மூலம் லோகசபையில் காங்கிரஸ் பலம் 25 ஸ்தானங்கள் குறைந்தாலும் காங்கிரஸ் அரசாங்கம் கவிழலாம். ஹரியானாவிலும், உ. பி.யிலும் பிளவுகள் ஏற்படுமானால் லோகசபையில் ஏன் ஏற்பட முடியாது? இது பகல் கனவல்ல"

தற்போதைய காலகட்டத்தின் பிரதான கோஷத்திற்கு ஆளும் கட்சியில் பிளவு ஏற்படுவதையே திரிபுவாதிகள் ஆதாரமாகக் கொண்டுள்ளார்கள் என்பதற்கு வேறு சான்று வேண்டியதில்லை.

ஆளும் கட்சியில் பிளவு ஏற்படலாம் என்பதையும், அதனால் நாடாளுமன்றத்தில் ஆளும் கட்சி கவிழலாம் என்பதையும் யாரும் மறுக்கவில்லை ஆனால் கட்சி மாறுவதை அடிப்படையாக வைத்து பிரதான அரசியல் கோஷத்தை எழுப்புவது மக்கள் இயக்கத்தைப் பற்றி இவர்கள் என்னதான் கூச்சல் போட்டாலும் வெறும் பார்லிமென்டரி தந்திரோபாயத்தில் இறங்குவதைதான் கோடிட்டுக்காட்டுகிறது

காங்கிரசை ஆட்சியிலிருந்து அகற்றுவது முற்றிலும் பார்லிமென்டரி முறையைச் சேர்ந்த ஒருமுறைதான் என்பது பூபேஷ்குப்தா எழுதியுள்ளதிலிருந்தும் புலனாகிறது. "தேர்தல் முடிவுகளின்படி குறிப்பாக பல மாநிலங்களில் காங்கிரஸ் அதிகாரத்திலிருந்து (?) கவிழ்ந்திருப்பதும் லோகசபையில் பெரும்பான்மைப் பலம் குறைந்திருப்பதும் மத்தியில் அதிகாரம் பற்றிய பிரச்னையை (வார்த்தைப் பிரயோகத்தைக்கவனிக்கவும்) முன்னணிக்குக் கொண்டு வந்துள்ளது" என்கிறார்.

மக்கள் உறுதியை வளர்ப்பது, ஜனநாயகத் திட்டத்தைப் பரப்புவது போன்ற பேச்சுக்கள் எல்லாம் ஆளும் கட்சியின் பிளவின் மீது அமைந்த தமது கோஷத்துக்கு வர்ணம்பூசுவதன்றி வேறல்ல. வெகுஜனப் போராட்டங்கள் மூலம் நாட்டின் வர்க்க சக்திகளின் சேர்க்கையை மாற்றும் கோஷமல்ல அது. "அதிகார"த்திலிருந்து காங்கிரசை அகற்றும் பெயரில் மிகவும் பிற்போக்குக் கட்சிகளுடன் திருட்டுத்தனமாக கூட்டு சேர்வதற்கான கோஷமே அது. பெருமுதலாளிகளின் மாற்று கட்சிகளான சுதந்திரா, ஜனசங்க முகாமில்சேர மக்களைஏமாற்றி அழைத்துச் செல்லப் போடும் கோஷம் அது.

### நம் நிலை

நம் கட்சியும் ஒரு நடைமுறை கோஷமாக மத்தியில் காங்கிரசல்லாத மாற்று சர்க்கார் அமைப்பது பற்றி வலியுறுத்துகிறது. ஆனால் ஆளும் கட்சியின் பிளவுகளைச் சார்ந்தோ மக்கள் விரோதக் கொள்கைகளை முறியடிப்பதற்கான வெகுஜனப் போராட்டங்களிலிருந்து பிரித்தோ அதை நாம் பார்க்கவில்லை. நம்முடைய மத்திய கமிட்டித் தீர்மானம் கூறுவதாவது: 'துரோகத்தனமான முயற்சியை எதிர்த்து எல்லா ஜனநாயகக் கட்சிகளையும், கோஷ்டிகளையும் ஒன்று சேர்க்க அது பாடுபடும். மாற்றுக் கொள்கைக்கான போராட்டத்தை முன் கொண்டுசெல்லும். அவ்வாறு செய்யும்போது மத்தியில் காங்கிரசல்லாத மாற்று அரசாங்கத்தை அமைக்கவும் முயற்சிக்கும். தற்போதைய கட்டத்தில் மாற்று கொள்கைகளுக்கான போராட்டத்தை வலியுறுத்தும்''. இது நமது நிலை.

திரிபுவாதிகள் நாடாளுமன்றத்தில் ஏற்படும் பிளவுகள் மீது நம்பிக்கை வைத்துள்ளார்கள். சந்தர்ப்பவாத நாடாளுமன்ற கூட்டுகளுக்கு வசதியாக வெகுஜனப் போராட்டத்தைப் பின்னுக்குத் தள்ளியுள்ளனர். இதன் முடிவான பலன் காங்கிரஸ் எதிர்ப்பு அதிர்ப்தியை சந்தர்ப்பவாத நாடாளுமன்ற நோக்கங்களுக்குப் பயன்படுத்துவதும் சமாதான பூர்வமாக அதிகார மாற்றம் பற்றி மக்கள் மனதில் பிரமைகளை உருவாக்குவதுமேயாகும்.

### அதிகார மாற்ற பிரமைகள்

எனவே மத்தியில் கூட்டு அரசாங்கத்தை மட்டுமின்றி மத்தியில் அதிகார மாற்றம் பற்றியும் திரிபுவாதத் தலைவர்கள் பிரமைகளைச் சிருஷ்டிப்பது தற்செயலானதல்ல. நாடாளுமன்றத்தில் காங்கிரஸ் பெரும்பான்மையை இழக்கும் நிகழ்ச்சியை மத்தியில் அதிகாரம் பற்றிய பிரச்சினையாக பூபேஷ்குப்தா எழுதுகிறார். அதேகருத்தில் என்.கே. கிருஷ்ணனும் எழுதுகிறார். "மத்தியில் அதிகாரம் பற்றிய பிரச்சினை அவசர முக்கியத்துவம் பெற்றுள்ளது" என்று எழுதுகிறார். (நியூஏஜ் மே.21)

மத்தியில் அதிகார மாற்றம் பற்றிய கோரிக்கையின் பொருள் என்ன? திரிபுவாதிகளின் கருத்தில் அது காங்கிரசல்லாத மாற்று கூட்டு சர்க்கார் அமைவது ஆகும். அவர்களுடைய "கூட்டு சர்க்கார்" கோஷத்தை அதிகார மாற்றமாகக் கூறுவதில் ஆச்சரியம் எதுவும் இல்லை. இருந்தாலும் பாராளுமன்ற முறையில் முங்கி மூழ்கிவிட்ட சந்தர்ப்பவாதிகள் என்று அவர்களை நாம் அழைத்தால் ஆட்சேபிக்கிறார்கள். அதிகார மாற்றத்துக்கும் முதலாளி வர்க்க-நிலப்பிரபுத்துவ அரசின்கீழ் அமைச்சரவை அமைப்பதற்கும் வித்தியாசத்தைப் பார்க்க மறப்பவர்கள் மார்க்சிசம் பற்றிய கொஞ்ச நஞ்சம் உள்ள தொடர்பையும் விட்டுவிட்டவர்கள் என்று கூறுவதில் தவறென்ன?

தற்போதைய நிலைமையைக் கணிப்பதில் வீரதீரம் காட்ட திரிபுவாதிகள், விரும்புகின்றனர். அரசியல், பொருளாதார நெருக்கடி, ஸ்திரமற்ற தன்மை, முற்போக்கு பிற்போக்கு சக்திகளிடையே மோதல் போன்ற சொற்களையெல்லாம் அள்ளி வீசுகின்றனர். ஆனால் இந்தக் காலகட்டத்தைப் பொருளாதார ரீதியாகவும் அரசியல் ரீதியாகவும் அவர்கள் எவ்வாறு கணித்து முடிவுகட்டுகின்றனர்? "முதலாளித்துவ வளர்ச்சிப்பாதைக்கு முன்னைவிட ஸ்திரமாக, தேசிய முதலாளி வர்க்கம் தனியாக ஆட்சி செய்வது என்பது முடியாத காலகட்டம்" என்கின்றனர். (தேசியக் கவுன்சில் தீர்மானம்—நியூ ஏஜ், மே 7) பிந்திய கணிப்பு அவர்களுடைய அரசியல் நிலையைக் குறிக்கிறது. தேசிய முதலாளி வர்க்கம் தனியாக ஆளமுடியாதாம், தொழிலாளி வர்க்கத்தை பிரதிநிதித்துவப் படுத்துவதாகக் கூறும் திரிபுவாதிகள் அந்தச் சுமையைப் பங்கு போட்டுக் கொள்ளத் தயாரர்ம். அதனுடன் கூட்டு அரசாங்கம் அமைப்பார்களாம். மக்களை ஏமாற்ற அதை அதிகார மாற்றம் என்று வேறு கூறுகிறார்கள்.

கூட்டு அமைச்சரவை அமைவது தேசிய ஜனநாயகத் திசை வழியில் ஒரு படியாம்.

இந்த வடிக்கட்டின சந்தர்ப்பவாதமும் கொள்கையற்ற அமைச்சரவை அமைப்பு யுக்தியும் கூட்டு அமைச்சரவையில் ஜனசங்கம், சுதந்திரா கட்சிகளையும் சேர்க்கச் சம்மதிக்கும் அவர்களது திட்டத்தில் வெளிப்படுகிறது. இந்த விஷயத்தில் அவர்கள் கையும் களவுமாகப் பிடிபட்டபின் திரிபுவாதிகள் இப்போது சுதந்திரா, ஜனசங்கக் கட்சிகளைச் சேர்த்துக் கொள்ளுவது என்ற விஷயத்தில் சிரத்தை கொள்ள வில்லை என்று கூறுகிறார்கள். பின்தங்கிய மக்களுக்குச் சலுகையாகவே அவர்களுடன் தீண்டாமையில்லை என்ற நடைமுறைத் தந்திரத்தைக் கையாண்டதாகவும் கூறுகிறார்கள். இந்தக் கட்சிகளைவிலகக குறைந்தபட்ச ஜனநாயகத் திட்டப் போர்வையை போர்த்தியிருக்க வில்லையா என்றும் அவர்கள் கேட்கிறார்கள்.

ஆனால் இந்தச் சாக்குப் போக்குகளை யார் நம்புவார்கள்? பல மாநில அமைச்சரவைகளில் ஏற்கனவே அவர்கள் ஜனசங்கத்துடன் கூட்டுச் சேர்ந்திருக்கவில்லையா? ராஜஸ்தானில் சுதந்திரா-ஜனசங்க அமைச்சரவை அமைக்கக் கோரி அவர்கள் தூதுகோஷ்டியை அழைத்துச் செல்லவில்லையா?

"தீண்டாமை கூடாது" "பிற்போக்குக் கட்சிகளுடைய அணிகளின் உணர்ச்சிக்கு மதிப்புத் தரவேண்டும்" என்ற பெயரில் இந்தக் கட்சிகளுடன் கூட்டுக்கு உபதேசம்தான் செய்யப்படுகிறது. நாடாளுமன்றத்தில் சி.ஐ.ஏ.க்கும் பி.எல். 480க்கும் எதிராக ஒரு ஜன சங்க உறுப்பினர் பேசியதைக் குறிப்பிடத் தகுந்ததாக பூபேஷ் குப்தா கருதியதில் ஆச்சரியமில்லையல்லவா? (ஜனாதிபதி தேர்தலில் அக்கட்சியின் வகுப்புவாதம் பற்றியும் இஸ்ரேலுக்கு அதன் ஆதரவு பற்றியும் பூபேஷ்குப்தா மௌனம் சாதிக்கிறார்.)

இந்த பிற்போக்குக் கட்சிகளுக்கு மறைமுக துதிபாடுவதின் மூலமாக திரிபுவாதிகள் கூட்டு அமைச்சரவைக்கு வழி வகுக்கிறார்கள். உ.பி., பஞ்சாப் அமைச்சரவை சம்பந்தமாக அக்கட்சிகளைப் பற்றிய தீர்மானத்தில் "மற்ற கட்சிகள்" என்றே குறிப்பிடுகிறார்கள். அக்கட்சிகளின் அரசியல் தன்மையைக் குறிப்பிட்டால் அவர்களது மனம் புண்பட்டு விடும் அல்லவா?

### பிராவ்தா செய்தி

சமீபத்தில் சுதந்திரா கட்சி பற்றி "பிராவ்தா" பத்திரிகையில் விமர்சனம் ஒன்று வெளிவந்திருந்தது. 'இந்தியாவின் மிகப்பெரும் பிற்போக்கு கட்சி சுதந்திரா. அமெரிக்க உளவு இலாகாவின் கைக்கருவி அது. மசானி, மற்றும் ஏகாதிபத்திய ஏவலாட்களின் சாதுரியங்கள் அமெரிக்காவில் பாராட்டப்படுகின்றன. பிப்ரவரி தேர்தல் சமயத்தில் சுதந்திரா கட்சிக்கு சி.ஐ.ஏ. பணம் கொடுத்தது பற்றிய செய்திகள் குறிப்பிடத்தக்கவையாகும்.'' திரிபுவாதிகளின் நெருங்கிய நட்பு வட்டாரத்திலிருந்து வரும் தகவல் இது. இனிமேலும் இக்கட்சிகளுடன் தீண்டாமை இல்லை என்ற அணுகும் முறையைக் கையாண்டு கூட்டு அமைச்சரவைக்கு அவர்கள் அழைப்பு விடுவார்களா? இந்தக் கட்சியின் சந்தர்ப்பவாதத்தைப் புரிந்து கொள்ளுவதும் அவசியமாகும்.

ஒரு மார்க்ஸிஸ்ட்-லெனினிஸ்ட் கட்சியின் நாடாளுமன்ற கூட்டும், நடைமுறை தந்திரமும் வர்க்கப்போராட்

(2ம் பக்கம் பார்க்க)

## குறிப்புகள்

# மத்திய அரசும் அவசரகாலபிரகடனமும்!

1962-ம் ஆண்டு பிரகடனம் செய்யப்பட்ட அவசரகால நிலைமையை இவ்வாண்டு ஜூலை 1ம் தேதி வாபஸ் வாங்கப்போவதாக அறிவித்த மத்திய காங்கிரஸ் அரசு பல்வேறு காரணங்களை முன்விட்டு தன்னுடைய முடிவை மாற்றிக்கொள்ள முன்வந்திருப்பதாக "இந்தியன் எக்ஸ்பிரஸ்" செய்தி ஒன்று கூறுகிறது.

இதற்கு என்ன காரணம் கூறப்படுகிறது தெரியுமா? மேற்கு வங்கத்தில் நக்சல்பாரி நிகழ்ச்சிகளும் அசன்சால், தான்பத் போன்ற இரும்பு, நிலக்கரி விளையும் வங்க மாநிலத்தின் மாவட்டங்களில் அமைதியின்மை நிலவுவதாகவும் மேற்கு வங்கக் கவர்னர் தர்மவீராவைக் கூப்பிட்டு அரசாங்கம் இது குறித்து பரிசீலனை செய்த பின்பு இந்த முடிவுக்கு அவசியம் ஏற்பட்டதாக அந்தச் செய்தி கூறுகிறது.

மேற்கு வங்க நிலைமையைப் பற்றி பேச அழைக்கப்பட்டவர் அந்த ராஜ்ய நிர்வாகத்தை கையில் வைத்துள்ள முதலமைச்சரோ அல்லது வேறு அமைச்சர்களோ அல்ல. சட்டம், ஒழுங்குப் பிரச்சினையை நேரடியாக நிர்வகிப்பது மேற்கு வங்க முதலமைச்சர் அவரை அழைத்துப் பேசாமல் ஒரு சில நாட்களுக்கு முன் மத்திய அரசால் நியமிக்கப்பட்ட அதன் பிரதிநிதியான கவர்னர் தர்மவீராவை அழைத்துப் பேசியிருக்கிறார்கள் என்றால் இதன் பொருள் என்ன?

மேற்கு வங்க நிலைமையை அறிந்துகொள்ள அங்கு ஆட்சி புரியும் அரசாங்கத் தீர்ப்பை நம்ப முடியாது என்றும் தன்னுடைய கையாளான கவர்னர் தான் தங்களுக்கு நம்பிக்கையான விவரங்களைத் தருவார் என்றும் ஒரு நிலையை மத்திய அரசு எடுத்து விட்டது என்றே தெளிவாகிறது, தன்னுடைய பிரதிநிதியான கவர்னர் தன் உள்நோக்கத்துக்கு சாதகமான ரிப்போர்ட்டை தராமல் பாதகமாக ரிப்போர்ட்டைத் தரமாட்டார் என்று மத்திய அரசுக்குத் தெரியும். ஆகவே கேரளத்தில் செய்ததுபோலவே ஸ்தலத்திலுள்ள மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கத்தை நம்பாமல் கவர்னரின் அறிக்கை மீது நடவடிக்கை எடுக்கிறோம் என்று பறைசாற்றிக் கொள்ளுவதற்காக வங்க அரசைக்கவிழ்க்க திட்டமிட்டு மத்திய அரசு இந்த ஏற்பாட்டினைச் செய்து வருகிறது.

இவ்வாறு சட்டவிரோதமாக அரசியல் வெறுப்புடன் மாற்று கட்சி அரசாங்கத்தை கவிழ்க்கும் நோக்கத்துடன் செயலாற்றும்போது இந்த நிலைமையையும் காரணம் காட்டி இந்த நாட்டு ஜனநாயகத்தையே அழித்தொழிக்குப் பேராபத்தான அதாவது அவசரகால நிலைமையை நீடிப்பதென்ற முடிவை மத்திய அரசு எடுக்கப்போகிறது.

பார்லிமெண்டில் தாங்கள் விரும்பும் அரசியல் சட்டத் திருத்தத்தைக் கொண்டு வரும் மெஜாரிடி காங்கிரசுக்கும் கிடையாது. அவசரகால நிலைப் பிரகடனத்தை வாபஸ் வாங்கினால் சென்ற 5 ஆண்டுகளாக பாதுகாப்புச் சட்டப்படி அதிகாரிகள் எடுத்த நடவடிக்கைகளுக்காக அரசியல் சட்டப்படி சம்பந்தப்பட்டவர்கள் நடவடிக்கை எடுக்க முடியும். எனவே தங்களுடைய சென்றகால அரசியல் சட்டவிரோதச் செயல்களிலிருந்து தப்பித்துக் கொள்ள வேண்டுமானால் அரசியல் சட்டத்தை திருத்தியாக வேண்டும். இதை இன்று பார்லிமெண்டிலுள்ள கட்சிகளின் பலாபலத்தில் மத்திய அரசு செய்யமுடியாமலிருக்கிறது. எனவேதான் வங்க நிலைமையைக் காரணம் காட்டி அவசரகால நிலைமை பிரகடனத்தை நீடிக்கவேண்டுமென்று கோர மத்திய அரசு முன்வந்துள்ளது.

இன்னும் பல நொண்டிக் காரணங்களையும் கூறிக் கொள்ள அவர்கள் தயங்க மாட்டார்கள். இவ்வாறு அவசரகால நிலைமைப் பிரகடனத்தை நீடித்தால் பாதுகாப்புச் சட்டப்படி எதிர்க் கட்சிகளை குறிப்பாக ஜனநாயக மாறுதலைக்கோரும் கட்சிகளைக் குறிப்பாக கம்யூனிஸ்ட் கட்சியை முடமாக்கலாம். விசாரணையின்றி சிறையில் அடைக்கலாம். அதன்பின் தேவையான "மெஜாரிடியுடன்" அரசியல் சட்டத்தையும் திருத்திக்கொள்ளலாம். இதுதான் மத்திய அரசின் சதித் திட்டம்.

பெருமுதலாளிகளையும் அந்நிய முதலாளிகளையும் பாதுகாக்க இந்திய அரசாங்கம் இந்த நாட்டு ஜனநாயகத்தைக் கொலைசெய்து ஒருகட்சி சர்வாதிகார பாசிஸ்ட் அரசாங்கத்தை ஏற்படுத்தச் சதி செய்துள்ளதையே "இந்தியன் எக்ஸ்பிரஸ்" செய்தி நமக்கு எச்சரிக்கையூட்டுகிறது.

# மாநில உள் விவகாரத்தில் தலையிடாதே!

சட்டம் ஒழுங்கு என்ற பிரச்சினை ஒவ்வொரு ராஜ்ய அரசாங்கம் சம்பந்தப்பட்ட பிரச்சினையாகும். இந்த விஷயத்தில் மத்திய அரசாங்கமோ அல்லது நாடாளுமன்றமோ தலையிடுவது அரசியல் சட்டப்படி ராஜ்ய அரசாங்கங்களுக்குத் தரப்பட்டுள்ள உரிமையை மீறுவதாகும். என்றாலும் மத்திய அரசாங்க உள்துறை அமைச்சர் சவான் மேற்கு வங்கத்தில் சட்டம் ஒழுங்கு நிலைமையைப் பற்றி ஆராய்ந்துவர சர்வ கட்சி பார்லிமென்டரி குழு ஒன்றை அனுப்பச் சம்மதித்துள்ளார். இவ்வாறு பார்லிமென்டரிக் குழு அனுப்புவது மேற்கு வங்க அரசின் உள் விவகாரங்களில் தலையிடுவது என்று முதலமைச்சர் அஜாய் முக்கர்ஜி அறுவித்துள்ளார்.

நம் கட்சி சார்பில் பி. ராமமூர்த்தியும் தி.மு.க. சார்பில் கே. மனோகரனும் வலதுசாரி கம்யூனிஸ்ட் கட்சி சார்பில் ஹிரேன் முகர்ஜியும் பங்களா காங்கிரஸ் சார்பில் ஹுமாயூன் கபீரும் சேர்ந்து இவ்வாறு குழு அனுப்புவது கூடாது என்று கூட்டறிக்கை விடுத்துள்ளனர்.

பிரதம மந்திரியையும் ராமமூர்த்தி பார்த்து இவ்வாறு செய்வது ராஜ்ய அரசாங்கம் மேற்கொண்டுள்ள நடவடிக்கைகளைச் சீர்குலைப்பதாகும் என்று எச்சரித்துள்ளார்.

கம்யூனிஸ்ட் கட்சியின் செயலாளர் தோழர் சுந்தரய்யா ஐக்கிய முன்னணி அரசுக்கு எதிராக ஆழமான அரசியல் சதி நடத்தி வருவதில் ஒரு பகுதி இது என்று கண்டனம் செய்துள்ளார்.

உதவி முதலமைச்சர் தோழர் ஜோதிபாசு, வங்காளத்தில் நிலைமை எப்போதும் போல் சௌஜன்யமாகத்தான் இருக்கிறது. சட்டம், ஒழுங்கு குலையவில்லை. அப்படியிருந்தும் பார்லிமென்டரிக் குழு அனுப்ப முடிவெடுத்திருப்பது அரசியல் உள்நோக்கத்துடன் செய்யும் சாகசம் என்று கண்டனம் செய்துள்ளார்.

இத்தனை எதிர்ப்பையும் மீறி உள்துறை அமைச்சர் சவான் பார்லிமென்டரிக் குழுவை அனுப்ப முன்வந்தால் அது நிச்சயமாக மத்திய அரசு மேற்கு வங்க அரசைக் கவிழ்க்க தீவிர நடவடிக்கை எடுக்க முன்வந்துவிட்டது என்பதே அர்த்தமாகும்.

நக்சல்பாரியில் நடந்த ஆதிவாசிகளினுடைய கிளர்ச்சி சம்பந்தமான பிரச்சினைகளை நேரில் விசாரித்துத் தீர்வு காண வங்க அரசின் 6 மந்திரிகள் அடங்கிய குழு சகல முயற்சியும் செய்துவரும் போது இதையெல்லாம் மீறி சவான் நடவடிக்கை எடுத்த வருகிறார் என்றால் அதற்கு என்ன பொருள்? மாற்று கட்சி அரசுகளை குறிப்பாக கம்யூனிஸ்டுகள் பங்கு கொண்டுள்ள அரசுகளைக் கவிழ்ப்பதற்கு அந்நிய, இந்திய ஏகபோகவாதிகளின் தூண்டுதலில் நடவடிக்கை எடுப்பதைத்தான் இது எடுத்துக் காட்டுகிறது.

# மக்கள் இயக்கத்தின் மூலமே மாற்று அரசு!

(2ம் பக்கத் தொடர்ச்சி)

திரா, ஜனசங்கத்திடமிருந்து பிரிப்பதற்குப்பதில் இந்த இரு கட்சிகளுக்குமிடையே யுள்ள உறவை பலப்படுத்தவே செய்யும்.

வர்க்கப் பாத்திரமும், வர்க்கத் தன்மையும் எப்படியிருந்தாலும் எல்லா கட்சிகளும் சமமே என்ற வர்க்க மற்ற பார்வையைக் கைவிடச் செய்யும் முறையில் நாடாளுமன்றத்திலும் வெளியிலும் போராட்டங்கள் தொடர்ந்து நடைபெறும் போது மத்தியில் காங்கிரசல்லாத ஜனநாயக மாற்று அரசாங்கங்கள் அமைவது சாத்தியமாகும்.

சுதந்திரா கட்சிக்கும் ஜனசங்கத்துக்கும் பயந்தும் சம்யுக்த சோஷலிஸ்ட் கட்சி, பி.சோ. கட்சி ஆகியவற்றின் விமர்சனத்திற்கு ஆளாகாமலிருப்பதற்காகவும் திரிபுவாதிகள் அவர்களுடைய குறைந்த பட்சத் திட்டத்தில் வேண்டுமென்றே சீனா, பாகிஸ்தானுடன் சமாதானத் தீர்வுகாண வேண்டுமென்றே கோரிக்கையையும் பாதுகாப்புச் செலவை குறைக்க வேண்டுமென்ற கோரிக்கையையும் விட்டுவிட்டார்கள். இது பகிரங்கமாக அம்பலப் படுத்தப்பட்டதும் குறைந்த பட்சத் திட்டம் என்பது ஒரு வழிகாட்டும் திட்டம்தான் என்று பித்தலாட்டம் செய்கின்றனர். பாதுகாப்புச் செலவும், பாகிஸ்தான் சீனாவுடன் சமாதான ஒப்பந்தமும் வழிகாட்டும் திட்டம் என்று கூறப்படுவதில் சேர்க்கப்படாமலிருக்க அவ்வளவு சிறிய விஷயங்களா? அவர்களுடைய முதலாளி வர்க்கத் தேசியத்துக்கு ஏற்ப மற்ற கட்சிகளைப் புண்படுத்த திரிபுவாதிகள் விரும்பவில்லை.

இன்று நாட்டில் அரசியல் நெருக்கடி முற்றி வருகிறது. மக்கள் இடைவிடாமல் தாக்கப்படுகின்றனர்.

ஜனநாயக அமைச்சரவைகளைஎதிர்ப்பதிலும் நம் நாட்டு ஏகபோகவாதிகளுக்கும் அமெரிக்காவுக்கும் காங்கிரஸ் அரசாங்கம் சரணாகதி அடைவதிலும் ஜனசங்கமும், சுதந்திராவும் காங்கிரஸ் முகாமிலேயே உள்ளனர்.

ஜனநாயக மாற்று அமைச்சரவைகளுக்கு ஆதரவான போராட்டம் நாடாளுமன்ற போராட்டமல்ல. மக்களது ஆதரவைத் திரட்டுவதற்கான போராட்டம். முதலாளி வர்க்க—நிலப்பிரபுத்துவ கூட்டுக்கு எதிராக மக்கள் பலத்தைத் திரட்டும் போராட்டமாகும். இந்த வெகுஜனப் போராட்டங்களில்தான் காங்கிரஸ் ஆட்சிக்கு உண்மையான சவால் விடுக்கப்படும். இந்தப் போராட்டத்தின் ஒரு பகுதியாகவே சாத்தியமானால் காங்கிரசல்லாத ஜனநாயக அமைச்சரவை கோஷத்தையும் எழுப்ப முடியும்.

திரிபுவாதிகளின் கூட்டு அமைச்சரவை கோஷம் முதலாளிவர்க்க தேசிய இன வெறிக்கு சலுகை அளித்து சுதந்திரா, ஜனசங்கத்தை வசியம் செய்யும் நாடாளுமன்ற பிளவு மீது அமைந்த கோஷமாகும். பாதுகாப்புச் செலவைக் குறைக்கவும், சீனா, பாகிஸ்தானுடன் சமாதானத் தீர்வைக் காணவும் கோரும் கோரிக்கையை நசுக்கும் கோஷமாகும். இது பார்லிமெண்டரி சூழ்ச்சியன்றி வேறல்ல. இது இடதுசாரி ஒற்றுமையை வளர்ப்பதற்கு பதில் குலைக்கிறது.

# மதுரை ஹோட்டல் தொழிலாளர் ஆர்ப்பாட்டம்!

மதுரை அம்சவல்லி உணவு விடுதி நிர்வாகம் வழக்கமாக கொடுத்து வந்த 4 மாத போனஸை இவ்வாண்டில் வழங்க மறுத்ததுடன். 2 தொழிலாளர்களை டிஸ்மிஸ் செய்தும், 1 தொழிலாளியை சஸ்பெண்ட் செய்துமுள்ளனர்.

இதை எதிர்த்து தொழிலாளர்கள் அமைதியான முறையில் போக்குவரத்து இடைஞ்சலின்றி, ஹோட்டல் முன் ஆர்ப்பாட்டம் நடத்திவந்தனர். போலீசார் மீண்டும் இதில் தலையிட்டு நிறுத்தியுள்ளனர்.

இது சம்மந்தமாக ஸ்தல, உயர்தர போலீஸ் அதிகாரிகளுக்கும், அமைச்சர்களுக்கும் கடிதங்கள், மகஜர்கள் தந்திகள் அனுப்பப்பட்டுள்ளன.

# அன்னூரில் கம்யூ. தி.மு.க. பிரதிநிதிகள் கூட்டம்!

அவனாசி தாலுகா அன்னூரில் ஏப்ரல் 17ம் தேதி கம்யூனிஸ்ட் (மார்க்சிஸ்ட்) கட்சி, தி.மு.க. பிரதிநிதிகள் கூட்டம் நடைபெற்றது.

அவனாசி தாலுகா பாசனத்துக்கு குந்தா திட்டத்தைப் பயன் படுத்தக்கோரி தமிழக முதலமைச்சரிடம் தூதுக்குழு அனுப்பக் கூட்டத்தில் முடிவெடுக்கப்பட்டது.

## "தீக்கதிர்" சந்தா விபரம்!

ஓராண்டு ரூ. 10

அரை ஆண்டு ரூ. 5

தனிப்பிரதி 20 காசு

# தி.மு.க. அரசைக் கவிழ்க்க காங்கிரசார் செய்யும் சதிகளை முறியடிப்போம்!

## தர்மபுரியில் எம். ஆர். வெங்கட்ராமன் பேச்சு !

இந்திய கம்யூனிஸ்ட் கட்சி தர்மபுரி வட்ட கமிட்டி சார்பில் ஜூன் 1-ம் தேதி தர்மபுரியில் நடந்த பொதுக் கூட்டத்தில் தோழர் எம்.ஆர். வெங்கட்ராமன் பேசினார். தர்மபுரி தொகுதி மக்கள் காங்கிரசை தோற்கடித்ததற்காக நான் உங்களை பாராட்டுகிறேன். இனி மேல் தேர்தலில் யார் யார் எங்கு நின்றார்கள் எங்கு தோற்றார்கள் என்று பேசி கொண்டு இருக்க தேவையில்லை.

நம் மாநிலத்தில் கூட்டணி சார்பில் காங்கிரசை தோற்கடித்து முழுபலத்துடன் தி.மு.கழகம் ஆட்சிக்கு வந்து இருக்கிறது. மாஜி முதல் மந்திரி பக்தவச்சலம் சி. சுப்ரமணியம் ஒ. வி. அளகேசன் போன்றவர்கள் பொறுப்பற்ற முறையில் பேசுகிறார்கள். 20 ஆண்டு காங்கிரஸ் காலத்தில் படுமோசமான நிலையில் மக்களை வைத்து விட்ட இவர்கள் இன்று கீழான நிலைக்கு இறங்கி விட்டார்கள்.

திராவிட முன்னேற்ற கழகம் முழுமெஜாரிட்டியில் வந்து இருக்கிறது. இதை யாரும் கவிழ்க்க முடியாது. எங்களால் தி.மு.கழக வெற்றி பெற்று இருக்கிறது. அவர்களால் நாங்களும் வெற்றிபெற்று இருக்கிறோம்.

தி.மு. சர்க்கார் சரியான நடவடிக்கைகள் எடுக்கும்பொழுது காங்கிரஸ்காரர்கள் அதைக் கவிழ்க்க பார்க்கிறார்கள். கவிழ்க்கும் நடவடிக்கையில் இறங்கினால் இடதுசாரி கம்யூனிஸ்ட் கட்சி திராவிட முன்னேற்றக் கழகத்தின் பக்கம் நின்று முறியடிக்கும் என்பதை தெரிவித்துக் கொள்ளுகிறேன். இந்த ஒற்றுமையை யாரும் பிரிக்க முடியாது.

இப்பொழுது நெசவாளர்கள் மிகவும் கஷ்டப்பட்டு கொண்டு இருக்கிறார்கள். அவர்கள் மீது ஏராளமான வரிகள் போடப்பட்டுள்ளன. எஃகு கண்ட்ரோலை நீக்கினார்கள் இந்த நாட்டின் எஃகு உற்பத்தி 4 முதலாளிகள் கையில் இருக்கிறது. இவர்கள் கண்ரோல் விலைக்கு அதிகமாக விற்று கொண்டு இருக்கிறார்கள். இவர்களுக்கு உதவி செய்வதற்கென்றே மத்திய அரசு எஃகு கண்ரோலை நீக்கியுள்ளது.

இங்கு உணவு விலையை குறைக்க மாநில சர்க்கார் முயற்சி செய்துக்கொண்டு இருக்கும் பொழுது மத்திய சர்க்கார் பல மறை முக வரிகளைப்போட்டு மாநில அரசின் முயற்சிகளை முடமாக்கி வருகிறார்கள்.

துணி விலையை ஏற்கனவே 4 3/4 சதவிகிதம் உயர்த்தி விற்க முதலாளிகளுக்கும் அனுமதி கொடுத்துவிட்டார்கள்.

உரம் உற்பத்தியில் 75 சதவிகிதம் விலை உயர்த்தி விற்க அமெரிக்காகாரர்களுக்கு அனுமதி அளித்து விட்டார்கள். இவர்கள் இதே மாதிரி செய்தால் தேர்தலில் கொடுத்த படிப்பினையை மீண்டும் காங்கிரஸ்காரர்களுக்கு மக்கள் கொடுப்பார்கள்.

தமிழகத்தில் காங்கிரஸ்காரர்கள் 8 மில்களை மூடிவிட்டு போய்விட்டார்கள். அந்த தொழிலாளிகள் இன்று பட்டனி கிடந்து செத்து கொண்டு இருக்கிறார்கள்.



இந்த மில்களை தி.மு.கழக சர்க்கார் திறக்க நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று கேட்டுக்கொள்கிறோம்.

கேரள அரசில் முக்கியபங்கு வகிப்பது இடதுசாரி கம்யூனிஸ்ட் கட்சி. வங்கத்திலும் முக்கிய பங்கு வகிப்பது இடதுசாரி கம்யூனிஸ்ட் கட்சி தான் என்பது உங்களுக்கு தெரியும்.

இன்று தி.மு.கழக சர்க்கார் 1 ரூபாய்க்கு 1-படி அரிசி கோவையிலும் சென்னையிலும் போடுகிறார்கள். அதற்காகப் பாராட்டுகிறோம்.

அதே நேரத்தில் எல்லா நகரங்களிலும் இதுபோல் அரசு விற்க ஏற்பாடு செய்யும் படி கேட்டு கொள்கிறோம். இப்பொழுது சென்னையிலும் கோவையிலும் 7 அவுன்ஸ் தான் போடுகிறார்கள். இது போதாது 12 அவுன்ஸ் போட ஏற்பாடு செய்யவேண்டும். மற்ற நியாய விலைகடைகளில் 5 அவுன்ஸ் தான் போடுகிறார்கள் இதிலும் மாறுதல் காண வேண்டும்.

12 அவுன்ஸ் போட வேண்டும். 10 ஏச்கருக்கு மேல் உள்ளவர்களிடத்தில் கட்டாயக் கொள்ளுமுதல் செய்யவேண்டும். செய்தால் 14 லட்சம் டன் அரிசி கிடைக்கும். சென்ற காலத்தில் காங்கிரஸ்காரர்களும் சில அதிகாரிகளும் உணவு உற்பத்திபற்றி மோசமான தப்பு கணக்கு கொடுத்திருக்கிறார்கள். இவைகளை தி.மு.க. அரசு நம்பிவிடக் கூடாது.

இன்று மத்திய சர்க்கார் ஏராளமாக ராணுவத்திற்கு செலவு செய்கிறது. இது வீண் விரயமாகும். ரூ 1000 கோடி செலவு செய்கிறார்கள். இதைக் கணிசமாகக் குறைக்க வேண்டும் என்று வற்புறுத்தி வருகிறோம்.

இதையே டெல்லியில் முதலமைச்சர் திரு அண்ணாதுரையும் சொல்லி இருக்கிறார் இதை எல்லாம் காங்கிரஸ்காரர்கள் செய்யவில்லை என்றால் சீக்கிரமே மக்களால் தூக்கி எறியப்படுவார்கள் என்பதில் யாருக்கும் சந்தேகம் வேண்டாம் என்று பேசி முடித்தார். மற்றும் கே. சி. கிருஷ்ணன் டாக்டர் கே.துரைசாமி எ. முனுசாமி ஆகியோர் பேசினர். என். பழனிவேல் தலைமை வகித்தார்.



# வங்கத்தில் போட்டி சர்க்கார் அமைத்துள்ளது மத்திய அரசு

(முதல் பக்கத் தொடர்ச்சி)

கிறது. இதன் பொருள் என்ன?

### மறை முக ஏற்பாடுகள்

வங்கத்தில் இன்று ஆட்சி புரிவது மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்ட அரசாங்கம் அல்ல. வங்கத்தில் மக்களால் தோற்கடிக்கப்பட்ட காங்கிரசின் தூண்டுதலில் நடக்கும் மத்திய அரசின் மறைமுக போட்டி அரசாங்கமாகும். ஆக வங்கத்தில் இன்று போட்டி ஆட்சியை ஏற்படுத்தி நடத்திவருவது ஐக்கிய முன்னணி கம்யூனிஸ்ட் கட்சி அல்ல. மக்கள் விரோதக் காங்கிரஸ்.

முதலாளித்துவப் பத்திரிகைகளான தினமணி, இந்தியன் எக்ஸ்பிரஸ், ஹிந்து போன்ற சகல பத்திரிகைகளும் காங்கிரஸ் அரசாங்கத்தினால் தூண்டிவிடப்பட்ட பிரசாரத்தை முறையாக செய்து வருகின்றன. கல்கத்தாவில் உள்ள பெரும் பெரும் முதலாளிகளும் அந்நிய சுரண்டல்காரர்களும் டெல்லிக்கு அடிக்கடி போய் வருகிறார்கள். மந்திரிசபையைக் கவிழ்க்க ஏற்கள் ஜரூராகச் செய்யப்பட்டு வருகின்றன.

நக்சல்பாரி வட்டாரத்தில் இடதுசாரி கம்யூனிஸ்டுகள் ஆயுதந் தாங்கிய போராட்டத்துக்கு தயாராகிவிட்டார்கள் என்றும் போட்டி அரசாங்கத்தை அமைத்துவிட்டார்கள் என்றும் கோயங்காவின் தினமணி கூப்பாடு போடுகிறது. விவசாயிகளை நிலத்திலிருந்து வெளியேற்றுவதை எதிர்த்து நடைபெறும் போராட்டத்தை போட்டி அரசாங்கம் என்று துணிந்து பொய் கூறுகிறார்கள் என்றால் இதற்கு ஆழமான உள்நோக்கம் உண்டு. அது என்ன?

### மாற்று அரசுகளை ஒழிக்க திட்டம்

காங்கிரசல்லாத மாற்று ஜனநாயக அரசுகளின் கீழ் மக்களுக்குப் பயன்தரும் எத்தகைய மாறுதலும் ஏற்படக் கூடாது. அதற்காகக் கிளர்ச்சி நடந்தால் அந்த இயக்கத்தையும் அதற்கு மதிப்பு கொடுக்கக் கூடிய மாற்று அரசுகளையும் ஒழிக்க வேண்டும். இதுதான் நிலப்பிரபுத்துவ பெருமுதலாளித்துவ சுரண்டல் கூட்டங்களின் கோரிக்கை. இதைத் தான் காங்கிரசின் ஆளும் வட்டாரங்களும் தினமணி, நவசக்தி போன்ற அவர்களது பிரசார கருவிகளும் இப்போது செய்து வருகின்றன.

வங்க அரசைக் கவிழ்ப்பதற்கு இவை எல்லாம் ஆரம்ப நடவடிக்கைகள். அந்த ஆட்சியை நேர்மையான வழியில் வாக்குச் சீட்டின் மூலம் முறியடிக்க முடியாது. பொதுத்தேர்தலுக்குப் பின் நடந்த நகர சபைதேர்தலில் வங்கமாநிலம் முழுதிலும் காங்கிரஸ் படுதோல்வி கண்டுள்ளது. இதையும் காங்கிரஸ்காரார்கள் உணருகிறார்கள். எனவே அவர்கள் முன்னுள்ள ஒரேயொரு ஆயுதம் தங்களுக்கு 20 ஆண்டு காலமாக பயன்பட்டு வந்த நிர்வாக யந்திரம். போலீஸ், அதிகார வர்க்கம் ஆகியோரைப் பயன்படுத்தி நியாயம் கோரும் மக்களைச் சுட்டுப் பொசுக்கி கலவரங்களை உண்டாக்கி வங்கத்தில் சட்டம் ஒழுங்கு குலைந்துவிட்டது என்று கூறி கேரளத்தில் செய்ததுபோல் புதிய அராங்கத்தை கவிழ்க்கப் பார்க்கிறார்கள்.

### இரு வாரங்களுக்கு பிறகு

மத்திய மந்திரிசபை சில நாட்களுக்கு முன் கூடி வங்க மந்திரிசபைக்கு இரண்டு வார கால அவகாசம் கொடுத்திருக்கிறதாம். அதற்குள் அவர்கள் விரும்புகிற மாதிரி நிலைமை மாறவில்லை என்றால் வங்க அரசைக் கவிழ்த்துவிட்டு மத்தியில் பதவியிலுள்ள காங்கிரஸ்காரர்களின் ஜனாதிபதி ஆட்சியை ஏற்படுத்தப் போகிறார்களாம்.

நிலைமை மிகமிகத் தெளிவு. காங்கிரசல்லாத மாற்று அரசுகளில் முன்னணியில் நிற்கும் வங்க அரசைக் கவிழ்த்துவிட்டால் இந்திய நாடு முழுதும் இதே வேலையை ஒன்றன்பின் ஒன்றாக செய்துவிட முடியும் என்ற தைரியத்துடன் மக்களால் வெறுக்கப்பட்ட காங்கிரஸ் இந்த மானங்கெட்ட ஜனநாயக விரோதச் செயலில் ஈடுபட முன்வந்துள்ளது.

இன்று வங்கம்! நாளை கேரளம்! அதன்பின் தமிழகம்! இதுதான் காங்கிரஸ் மீண்டும் பதவிக்கு வரப் போட்டுள்ள செயல் திட்டம்.

ஜனநாயகத்தை விரும்பும் மக்கள், ஜனநாயக மாற்று கட்சியினர் சிந்திக்க வேண்டும். இதை அனுமதிக்கப் போகிறோமா? இந்த நாட்டின் அரைகுறை ஜனநாயகத்தையும் அழித்தொழிக்க அனுமதிக்கப் போகிறோமா! இது தான் கேள்வி.

இதற்குத் தமிழ்நாட்டு மக்களும் தக்கபதில் கூற வேண்டிய காலம் வந்துவிட்டது.

— கே. முத்தையா



# அந்நிய கடன்களை ஒத்திவைப்பீர்! பாதுகாப்புச் செலவை குறைத்திடுவீர்!

## நாடாளுமன்றத்தில் பி. ராமமூர்த்தி கோரிக்கை!

பிரிட்டிஷ், பிரெஞ்சு முதலாளிகள் தங்களின் சாம்ராஜ்யங்களிலிருந்து கொள்ளையடித்து மூலதனம் கொண்டு வந்ததுபோல் இந்திய முதலாளிகள் தங்களின் மூலதனத்தை திரட்ட அத்தகைய சாம்ராஜ்யங்கள் இல்லை. நமது டாட்டாக்களுக்கும், பிர்லாக்களுக்கும் அத்தகைய சாம்ராஜ்யங்கள் இல்லை. எனவே அவர்கள் செய்வது என்ன? 1947ல் காங்கிரஸ் அரசாங்கம் அமைந்த காலத்திலிருந்து நமது மக்களை கொள்ளையடித்து மூலதனம் திரட்டுகிறார்கள். இதற்குத்தான் அன்றிலிருந்து இன்று வரை காங்கிரஸ் அரசாங்கம் உதவி செய்து வருகிறது. எவ்வாறு? மக்கள் செல்வத்தை இந்தப் பெருமுதலாளிகள் சுரண்டக் கையாளும் கருவியே விலைவாசியை உயர்த்தும் முறை. இத்தகைய விலைவாசி உயர்வின் மூலம் பெருமுதலாளிகள் கொள்ளையடிக்க காங்கிரஸ் அரசாங்கம் சட்டபூர்வமாக ஏற்பாடு செய்து கொடுக்கிறது.

இதன் விளைவாக கள்ள மார்க்கெட்காரரர்கள், வியாபாரச் சூதாடிகள், லேவாதேவிக்காரர்கள் ஆகியோரின் எண்ணிக்கைதான் அதிகரித்தது.

விவசாயத் துறையில் விவசாயிகளுக்குச் சாதகமான எத்தகைய சீர்திருத்தமும் நிறைவேற்றப்படாததால் உற்பத்தியின் பெரும் பகுதியை நிலப்பிரபுக்கள் கொள்ளையடித்துக் கொண்டு போய்விடுகிறார்கள். மூலதனம்தேவையானால் இங்கிருந்தல்லவா எடுக்க வேண்டும்.

### பிச்சையோ பிச்சை!

சுதந்திராக் கட்சித் தலைவரான மசானிக்கு இது பிடிக்காது! காங்கிரஸ் அரசும் இதைச் செய்யாது. எனவே நடப்பது என்ன? உலகமெங்கும் பிச்சைப் பாத்திரத்துடன் மூலதனப் பிச்சை கேட்டு அலைவதுதான்.

"மூலதனம் கொடுங்கள்! உதவி செய்யுங்கள்! நீங்கள் கூறும் நிபந்தனைகளை ஒப்புக் கொள்ளுகிறோம். எங்களுடன் ஒத்துழைக்க வாருங்கள்" என்று கூறிச் செல்வதுதான்.

இந்தப் போக்கில் போனால் அந்நியருடன் கூட்டு சேர்வது தவிர வேறு வழியில்லை என்ற நிலைமைதான் ஏற்படும். இதன் விளைவு என்ன?

சென்ற 20 ஆண்டு காலத்தில் நமது நாட்டில் ஏகபோக முதலாளிகள் வளர்ந்தது தான். உலகத்திலேயே மிகக் கொடிய ரத்தம் உறிஞ்சும் அட்டைகள் நமது இந்த ஏகபோக முதலாளிகள். தங்கள் கையில் உள்ள அதிகாரத்தையும் அரசாங்கத்திடம் தமக்கு உள்ள செல்வாக்கையும் பயன்படுத்தி பாங்குகள் தொழில் நிதி கார்ப்பரேஷன் ஆகியவற்றிலிருந்து பணம் திரட்டுகின்றனர். தொழிலில் இவர்கள் போடும் இவர்களது சொந்தப் பணமோ மிகமிகக் குறைவு. பாக்கியெல்லாம் பாங்குகள் இன்ஷூரன்ஸ் கம்பெனியிலிருந்து திரட்டுகிறார்கள்.

அந்நிய முதலாளிகளுடன் இவர்கள் கூட்டு சேர்ந்துக் கொள்ள இந்திய அரசாங்கம் சகலவிதமான உத்திரவாதங்களையும் அளிக்கிறது. தொழிற்சாலைகளை இவர்களே ஆரம்பிக்க முடியாதா? தொழில் நுட்ப ஞானம் பெறுவதற்காகவே அந்நியருடன் கூட்டுச் சேர்ந்து கொள்வதாகக் கூறுகின்றனர். ஏன்? நீங்களே அந்த தொழில் நுட்ப ஞானத்தை இங்கிருந்து பெற முடியாதா? என்ன பதில் கூறுகிறார்கள். "தேவையில்லை. நாம் தான் அவர்களுக்குப் பணம் கொடுக்கிறோமே. ஆராய்ச்சியெல்லாம் அவர்களே நடத்தி தொழில் நுட்ப ஞானத்தை தரட்டுமே!" என்பதுதான் நமது முதலாளிகளின் பதில். இதுதானே இவர்கள் 20 ஆண்டுகளில் சாதித்த சாதனை.

### ரத்தம் உறிஞ்சும் அட்டைகள்!

நமது நாட்டின் சுதந்திரமான தொழில் வளர்ச்சிக்கு எதையுமே செய்யாத மனித ரத்தம் உறிஞ்சும் அட்டைகளை (ஏகபோகமுதலாளிகளை) உருவாக்கியதுதானே கண்ட பலன்! சொந்த நாட்டின் தொழில் நுட்ப அறிவையும் வளர்க்கவிடவில்லை. சுதந்திரமான ஆராய்ச்சியையும் அனுமதிக்கவில்லை.

இன்றைய நெருக்கடி நிலைமைக்கான பிரதான காரணம் இத்தகைய போக்கில் இருக்கிறது என்பதைப் பாராமல் அங்குமிங்கும் சில சீர்திருத்தங்களைச் செய்துவிட்டால் போதுமென்று சிலர் நினைக்கிறார்கள். இதே போக்கில் செயல்பட்டால் மேலும் மக்கள் மீது பாரத்தை சுமத்தும் நிலைமை நீடிக்கும்.

ஒரே ஒரு விஷயத்தில்தான் மசானி கூறியதில் எனக்கு உடன்பாடு உண்டு. அதுதான் பண்டங்களின் மீது விதிக்கப்படும் எக்சைஸ் வரி. குறிப்பாக இந்த எக்சைஸ் வரி மூலம் நமது நாட்டின் கைத்தறித் தொழிலே அழிந்தொழியும் நிலை ஏற்பட்டுவிட்டது. லட்சக்கணக்கான நெசவாளர்கள் இன்று வேலையில்லாப் பட்டாளத்தில் சேர்கின்றனர். நூல் மீது விதிக்கும் வரியைக் கூட நீக்குவது அவசியம் என்பதை நிதியமைச்சர் உணரவில்லை.

அதுமட்டுமல்ல. காபி தேயிலைமீது விதிக்கப்படும் வரி அந்தத் துறையிலும் விலைவாசியை அதிகமாக உயர்த்தப் போகின்றது. நூறு கப் காபிக்கு 11 பைசாதானே உயர்த்தியிருக்கிறேன் என்பார் நிதியமைச்சர். ஆனால் கப் காபி விலை இந்த விகிதத்தில் மட்டும் தானா உயரும்? ஒரு கப் காபிக்கு 5 பைசா அதிகம் வசூலிப்பார்கள்.

### விலைவாசி!

உணவு விலைவாசி உயர்வதைப் பற்றி அவரைக் கேட்டால் சென்ற ஆண்டிலிருந்து அல்லது அதற்கு முந்திய ஆண்டிலிருந்துதான் இந்த உயர்வு ஏற்பட்டுள்ளது என்பார். இதற்கு காரணம் பருவமழை தவறியதுதான் என்பார். உணவு உற்பத்தி மிக நன்றாக இருந்த 1964-65 காலத்தில் விலைவாசி உயரவில்லையா? சென்ற 20 ஆண்டு காலமாக விலைவாசிகள் தொடர்ந்து உயர்ந்துகொண்டே இருக்கிறது. பாங்குகள் மூலம் விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்துவோம் என்பார் நிதியமைச்சர். ஆனால் அனுபவம் என்ன?

சென்ற ஆண்டிற்கு முந்திய ஆண்டில் அக்டோபர் ஏப்ரல் மாதங்களில் பாங்குகள் தனிப்பட்டவர்களின் வியாபார வகைக்கு கொடுத்த கடன் ரூ. 308 கோடி ரூபாய். ஆனால் சென்ற ஆண்டு இது 415 கோடி ரூபாயாக உயர்ந்தது. இதுதானே நீங்கள் பாங்குகளை கட்டுப்படுத்திய லட்சணம்? கள்ளமார்க்கெட் செய்வதற்குத் தேவையான சூழ்நிலை தங்குதடையின்றி உருவாக்கித் தரப்படுகிறது.

### கேந்திர இடங்கள்!

முன்பு ஒரு தரம் ஆவடி காங்கிரஸ் மாநாட்டிற்குப் பிறகு பண்டித நேரு சென்னையில் பேசும்போது சொன்னார். "சிறு சிறு தொழில்களையெல்லாம் நாம் பிடித்துக்கொண்டிருக்கவேண்டிய அவசியமில்லை. எல்லாவற்றுக்கும் கேந்திரமான பொருளாதாரத்தில் ஆதிக்கம் தரும் உயர்ந்த இடங்களை மட்டும் பிடித்துக் கொண்டால் போதுமென்று சொன்னார். சென்ற 20 ஆண்டுகளில் இத்தகைய உயர்ந்த இடங்கள் எத்தனை பிடிக்கப்பட்டன? அங்கொன்றும் இங்கொன்றுமாக சில இரும்புத் தொழிற்சாலைகள் உருவாக்கப்பட்டன. பொருளாதாரத்தில் கேந்திரமானவை பாங்குகள். இவைகளைப் பிடிக்காத வரை கேந்திரமான இடங்களை பிடித்ததாகக் கூறுவதில் அர்த்தமில்லை. அதைச் செய்யாத வரை நாட்டின் பொருளாதாரத்தை உங்களால் கட்டுப்படுத்த முடியாது. இதுதான் அடிப்படையான விஷயம்.

### மத்திய-மாநில சச்சரவு!

இந்த நிலைமையில் மத்திய சர்க்காருக்கும் மாநில சர்க்கார்களுக்கும் சச்சரவு தோன்றத்தான் செய்யும். இன்றைய அரசாங்கத்தின்போக்கிலேயே ஏற்படும் தவிர்க்க முடியாத விளைவு இது. நிதியமைச்சர் சொல்கிறார்: "ராஜ்ய சர்க்கார்கள் தங்களின் அரசாங்க ஊழியர்களுக்கு அதிக கிராக்கிப்படி கொடுப்பதென்றால் கொடுக்கட்டும்: அதற்கு நாங்கள் எப்படி பொறுப்பேற்க முடியும்" என்கிறார்.

நான் கேட்கிறேன் விலைவாசி உயர்ந்ததற்கு பொறுப்பாளி யார்? ராஜ்ய சர்க்கார்களா பாங்குகளை நிர்வகிப்பதுயார்? ராஜ்ய சர்க்கார்களா? சென்ற ஆண்டு ரூ 415 கோடி ரூபாய் பொருள்களை வாங்கி சேமித்து வைத்து விற்பதற்கு வியாபாரிகளுக்குக் கடன் கொடுத்தது யார்? திரு அண்ணாத்துரையா அல்லது ஈ.எம்.எஸ். நம்பூதிரிபாடா? அல்லது ஜோதிபாசுவா? விலைவாசி உயர்வுக்கு காரணமாக இருந்தது நாணய மதிப்புக் குறைப்பு. இது தோழர் நம்பூதிரிபாட் செய்த வேலையா? நாணய மதிப்பை குறைத்த காரணத்தினால் தானே விலைவாசிகள் பயங்கரமாக உயர்ந்தன.

### வாக்குறுதி மீறல்!

அந்த சமயத்தில் திருவாளர்கள் சுப்பிரமணியமும், சசிந்திரசவுத்திரியும் கூறினார்கள் இதனால் இறக்குமதி செய்யப்படும் உணவுப் பொருள்களின் விலைகள் உயரும் என்பதையும் உரத்தின் விலை உயரும் என்பதையும் அவர்கள் ஒப்புக் கொண்டார்கள், ஒப்புக்கொண்டு அவர்கள் அதற்கு என்ன பரிகாரம் கூறினார்கள் தெரியுமா? அவ்வாறு அந்த உணவுப் பொருள்களின் விலை உயர்ந்தால் அதற்காக மானியம் கொடுத்து விலைவாசியைக் கட்டுப்படுத்தி உயராமல் செய்வோம் என்றார்கள்.

இந்த வாக்குறுதி கொடுத்து 10 மாதங்களுக்குப் பிறகு புதிய நிதியமைச்சர் என்ன சொல்கிறார்? உரத்திற்காக கொடுத்து வந்த மானியங்கள் வாபஸ் பெறப்படுகின்றன என்று அறிவிக்கிறார்.

உர விலையை உயர்த்தியதின் விளைவாக உணவு உற்பத்திக்காக ராஜ்ய சர்க்கார் மேற்கொள்ளும் முயற்சிகள் அனைத்தும் சீர்குலைக்கப்படுகின்றன.

விலைவாசியை உயர்த்தாமல் கட்டுப்படுத்துவோமென நீங்கள் கொடுத்த வாக்குறுதிகள் எங்கே? அதை ஏன் காப்பாற்றவில்லை! ஏன் தெரியுமா? அது பொது மக்களுக்கு கொ

(2—ம் பக்கம் பார்க்க)

## ஒப்புதலும் திமிரும்

"ஹிந்து" பத்திரிகை நிருபரான கே. எஸ். ஷெல்வங்கர் இங்கிலாந்து நாட்டின் முதலாளித்துவப் பத்திரிகைகள் இஸ்ரேல் தான் மத்திய கிழக்கில் ஆக்கிரமிப்பைத் துவங்கியது என்று ஒப்புக்கொள்ளுவதாக லண்டனிலிருந்து எழுதுகிறார்.

"முன்கை எடுத்து மின்னல் வேகத்தாக்குதல் நடத்தியது மூலமாகவே இஸ்ரேல் வெற்றியடைய முடிந்தது என்று "சண்டேடைம்ஸ்" என்ற லண்டன் ஏட்டிற்கு அதன் இஸ்ரேல் நிருபர் எழுதியுள்ளார். எடுத்த எடுப்பிலேயே இஸ்ரேலின் ஆகாய விமானப்படை முதன் முதலில் தாக்குதல் தொடுத்து தரையில் வைக்கப்பட்டிருந்த எகிப்து விமானங்களையெல்லாம் மின்னல் வேகத்தில் ஒழித்துவிட்டன. இதன் காரணமாக எகிப்தும் அதன் நேச நாடுகளும் தங்களைப் பாதுகாத்துக் கொள்ளும் ஆகாயக் குடையை இழந்தனர். இவ்வாறு இஸ்ரேல் முதலில் யுத்தத்தைத் துவக்கித் தாக்கிய காரணத்தினால் ஐ.நா.விலுள்ள இஸ்ரேல் நண்பர்களுக்கெல்லாம் தர்ம சங்கடமாக இருக்கிறது என்றும் அந்தப் பத்திரிகை எழுதுகிறது.

"அத்துடன் இஸ்ரேல் ஒரு மகத்தரனகாரியத்தைச் சாதித்து முடித்து விட்டது என்ற திருப்தியும் மகிழ்ச்சியும் தெரிவிக்கப்படுகிறது.

"சண்டேடெலிகிராப்" என்ற மற்றொரு பிரிட்டிஷ் பத்திரிகை "ஒரு சிறு வெள்ளையர் நாடு (இஸ்ரேல்) எவ்வாறு அதிக எண்ணிக்கையுள்ள கருப்பர்கள் நாடுகளையெல்லாம் ஒழிக்க முடியும் என்று உலகுக்கு எடுத்துக் காட்டிவிட்டது என்று எழுதியுள்ளது."

# அண்டை நாடுகளுடன் நல்லுறவு காண

# நாம் முன்கை எடுத்துச் செயல்பட வேண்டும்!

(6ம் பக்கத் தொடர்ச்சி)

டுத்த வாக்குறுதி தானே! மன்னர்களுக்கு கொடுத்த வாக்குறுதி போன்றதல்லவே அது புனிதமானது! இது நிரந்தரமானது! எனவே அதை மறுக்க முடியாது! மக்களுக்கு கொடுத்த வாக்குறுதி நிறைவேறவில்லை என்ருல் மக்கள் பொறுத்துக் கொள்வார்கள்! அவர்கள் துன்பத்திலேயே வாழப்பிறந்தவர்கள்! ஆனல் ராஜாக்கள்? அவர்களின் சுகபோக வாழ்வை எப்படி மறுக்கமுடியும்! இது தான் காங்கிரஸ் ஆட்சியின் தத்துவ ஞானம்!

சோஷலிஸம், கம்யூனிஸம் என்ற கொள்கைகளை உடனடியாக அமுல் நடத்திவிட வேண்டுமென்று நான் பேசவில்லை நமது தேசப் பொருளாதாரம் வளர்வதற்கு என்ன வழி என்று நான் கூற விரும்புகிறேன். நம் சொந்தக் காலிலேயே நிற்கிற நிலை வரவேண்டும். என்ன கஷ்டம் வந்தாலும் சரி இந்த உறுதி நமக்கு வேண்டும். நமது சுதந்திரத்தையும் கௌரவத்தையும் விலை பேசமாட்டோம் என்ற உறுதி நமக்கு வேண்டும்.

## செய்யவேண்டிய தென்ன ?

வரும் ஆண்டிலிருந்து அமெரிக்காவிலிருந்து நாம் பிச்சை வாங்கும் பி. எல். 480 ஐ நிறுத்துவோமா? அதற்குப் பதிலாக நமது நாட்டிற்குள் உற்பத்தியாவதை பூரணமாக கொள்முதல் செய்வோம் என்று உறுதி மேற்கொள்வோமா? இதைச் செய்யுமா இந்த அரசாங்கம்?

இந்த நாட்டில் 8 கோடி டன் உணவு தானியங்கள் உற்பத்தியாவதாக நமக்கு கூறப்படுகிறது ஆனல் கொள்முதல் செய்யப்பட்டது எவ்வளவு? 20லிருந்து 30 லட்சம் டன் வரைதான்! வசதி படைத்த நிலச்சுவான்தார் பகுதிகளிலிருந்து அவர்களின் உபரியை கொள்முதல் செய்யவே அரசாங்கம் விரும்பவில்லை.

இந்த உபரியைக் கொள்முதல் செய்தால் இந்த நாட்டில் உள்ள ஒவ்வொருவருக்கும் தினசரி 8 அல்லது 12 அவுன்ஸ் உணவு தாராளமாகத் தரமுடியும் அந்நிய உணவு இறக்குமதி அந்நிய உதவி தேவையில்லை. அந்நிய உதவியினுல் நமது நாட்டில் ஏற்பட்டுள்ள விளைவுகள் பயங்கரமானவை.

## பல நாடுகளின் உதாரணம்!

இந்த இடத்திலிருந்து இப்போதே ஒரு பிரகடனம் செய்யவேண்டும், அந்நிய மூலதனம், உதவி ஆகியவற்றுக்கான வட்டி லாப விகிதத்தை 10 ஆண்டுகளுக்கு ஒத்திப் போடுகிருேம் எனப்பிரகடனம் செய்ய வேண்டும். உலகில் பலநாடுகள் இதைச் செய்துள்ளன. இவ்வாறு செய்தால் பல நாடுகள் நமக்குக் கடன் கொடுக்க மறுக்கக் கூடும். ஆனல், அதைப்பற்றி கவலைப்பட வேண்டாம். நம் காலிலேயே நாம் நிற்போம் என்ற உறுதியை மேற்கொண்டால் இதை நிச்சயம் சமாளிக்கலாம்.

அந்நியர்கள் தம் மூலதனத்தை வாபஸ் பெற வந்தாலும் விடக்கூடாது? பத்து ஆண்டுகளில் எந்த மூலதனத்தையும் வாபஸ் பெறமுடியாது என்றும் பிரகடனம் செய்யவேண்டும். இவ்வாறு செய்வதன் மூலம் அந்நியச் செலாவணி ரூ 400 கோடி மிச்சமாகும். நமது கையில் இதை வைத்துக் கொண்டு சீர்குலையும் நமது பொருளாதாரத்தை செப்பனிட முடியும்.

இந்த நடவடிக்கையுடன் நம் உள்நாட்டில் உள்ள சுரண்டல் கூட்டத்தையும் குறிப்பாக ஏகபோக முதலாளிகளையும் நாம் கவனிக்க வேண்டும். ஒரு சிலரது கையில் சிக்கியுள்ள பொருளாதார பலத்தை ஞிறியடிக்க வேண்டுமானல் பொருளாதாரத்தில் அவர்களுக்குள்ள ஆதிக்கத்தைத் தகர்க்க வேண்டும். இதைச் செய்யாத வரையில் ஏகபோகத்தைக் கட்டுப்படுத்துவதாக கூறுவதில் அர்த்தமில்லை. அத்துடன் மாஜி மன்னர்களுக்கு கொடுக்கும் 5 கோடி மானியத்தையும் நிறுத்துங்கள்.

பண்டித நேரு கூறினுரே பொருளாதாரத்தில் ஆதிக்கம் செலுத்தும் இடங்களை பிடிப்பதுபற்றி. அந்த இடங்கள் தான் பாங்குகள் இன்ஷூரென்ஸ் நிறுவனங்கள். ஏனைய நிதி நிறுவனங்கள் இவைகளிடம் பெருமுதலாளித்துவக் கூட்டம் அருகில் நெருங்காமல் இருக்கும் படியான ஏற்பாட்டை செய்யுங்கள். செய்வீர்களா?

## விவாதம்!

விபூதிமிஸ்ரா: அப்படியானுல் நம்பூதிரிபாட் ஏன் பிர்லாவை கேரளாவிற்கு அழைத்தார்?

பி. ராமமூர்த்தி: அவ்வாறு அழைத்தது தவறு. இதை பகிரங்கமாகவே நாம் அறிவித்திருக்கிருேம்.

நம்பியார்: இந்த நிலைமையை உருவாக்கியதும் நீங்களே!

ராமமூர்த்தி: நாங்கள் ஒரு தவறு செய்தால் அதை பகிரங்கமாக ஒப்புக்கொள்கிருேம்.

தாரகேஸ்வரி சின்ஹா: கேரளத்தில் பிர்லாவுக்கு லைசென்ஸ் எதுவும் கொடுப்பதில்லை என்று நம்பூதிரிபாட் முடிவு செய்துவிட்டாரா? அல்லது அந்த முடிவை ஒத்திவைத்திருக்கிருரா?

ராமமூர்த்தி: பிரதம மந்திரிக்கு எழுதிய கடிதத்தில் நம்பூதிரிபாட் பிர்லாவுக்கு எத்தகைய லைசென்சும் கொடுக்க விரும்பவில்லை என்று குறிப்பிட்டிருக்கிருர். இவ்வாறு ஒரு சிலரிடத்தில் செல்வம் குவிவதை தடுத்தால் ஒழிய லஞ்சம் ஊழலை தடுப்பது முடியாது. பாங்குகளை தேசியமயமாக்குவதன் மூலம் மட்டும் விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்திவிடமுடியாது. காரணம் சென்ற 20 ஆண்டுகளில் ரூபாய் 3000 கோடியிலிருந்து ரூ 4000 கோடிவரை கருப்புப் பணம் உருவாகி நாட்டில் நடமாட அனுமதிக்கப்பட்டுள்ளது. அந்தக் கருப்புப் பண நடமாட்டத்தை ஒழித்துக் கட்டும் நடவடிக்கைகள் எதையாவது எடுத்தாலொழிய பாங்குகளை தேசிய மயமாக்குவது மட்டும் நாம் விரும்பும் பலனைத்தராது.

## நாணய மாற்றம்!

நாணயச் செலாவணியில் சில மாற்றங்களை (Demonetisation) கொண்டு வந்தாலொழிய இது நடக்காது, கருப்புப் பணத்தை பிடிக்க முடியாது.

நிலம் வாங்குதிலும் விற்பதிலும் நடைபெறும் சூதாட்டம், பங்குமார்க்கட் சூதாட்டம் போன்றவற்றுக்கு பயன் படுத்தும் அந்தப் பணத்தைதி தடுக்கவேண்டும். இவ்வாறு பயன்படுத்தும் பணமெல்லாம் பொருளுற்பத்திக்குப் பயன்படுத்தாதவையாகும். அவை மேலும் மேலும் கருப்புப் பணத்தை அதிகரிக்கவே உதவி செய்கிறது.

இத்துடன் கிராமப்புறத்திலுள்ள விவசாயிகள் நிலத்திலிருந்து வெளியேற்றப் படுவதையும் தடுத்து அவனை லேவாதேவிக் காரனிடமிருந்து விடுதலை செய்தால் நாடு முழுதும் நல்ல மாற்றமேற்படும். மக்களிடம் புதிய உற்சாகமேற்படும். செய்யுமா இந்த அரசு?

## பாதுகாப்புச் செலவு

இந்த இடத்தில் இன்னொரு விஷயத்தையும் நான் குறிப்பிட விரும்புகிறேன். பாதுகாப்புச் செலவுகளையும் குறைக்க நாம் முன்வரவேண்டும்.

ஒரு உறுப்பினர்: பாதுகாப்புச் செலவுகளைக் குறைப்பதா?

ராமமூர்த்தி: ஆம்! அந்தக் குறிக்கோளுடன் சில நடவடிக்கைகளை எடுப்பது அவசியம். நிதியமைச்சர் பேசுகிற சமயத்தில் ஒரு விஷயத்தைக் குறிப்பிட்டார். நமது அண்டை நாடுகளான பாகிஸ்தானுடனும் சீனத்துடனும் உள்ள பிரச்சினைகளை தீர்த்துக் கொண்டு கெடுபிடி நிலைமைகளை தணிக்க நமது அரசு தயாராக இருப்பதாக அவர் குறிப்பிட்டார். மகிழ்ச்சி. ஆனல், சென்றநான்கு ஆண்டுகளாக இந்த நிலைமையில் எந்த முன்னேற்றமும் இல்லை. இந்த தேக்க நிலையில் மாறுதல் காணவேண்டும் என்று நாங்கள் ஏதாவது சொன்னுல் உடனே நாங்கள் தேசத்துரோகிகள் என்று பெயர் சூட்டப் பெறுவோம்.

இப்போது நிதியமைச்சரே கெடுபிடி நிலைமைகளை தணிக்க முயற்சிகள் மேற்கொண்டிருப்பதாக அறிவித்துள்ளார். மிகவும் நல்லது.

பி.வெங்கடசுப்பையா: ஆனுல் அது நம் தேச கவுரவத்தை பாதிக்கும் முறையில் இருக்கக் கூடாது.

பி. ராமமூர்த்தி: அந்த விதத்தில் இருக்க வேண்டுமென்று நான் கூறவில்லையே. நாங்கள் என்ன சொல்கிருேமென்ருல் இரு நாடுகளிடமும் பேச்சுவார்த்தை நடத்த ஒரு அடிப்படையைக் காண்பதில் சாத்தியப்பாடுகளைக் கண்டுபிடிப்பதில் முன்கை எடுக்கவேண்டும் என்றுதானே கூறுகிருேம். நாங்கள் தேசத் துரோகிகள் என்று குற்றங் சாட்டப்பட்ட நேரத்தில் நாங்கள்நிறைவேற்றிய தீர்மானமும் இதைத் தானே கூறுகிறது. 2 ஆண்டுகளுக்கு முன்பு பூர்வாங்கப் பேச்சுவார்த்தைகளை நடத்த வேண்டுமென்று திரு நாசர் ஆலோசனை கூறியபோது காலஞ்சென்ற பிரதமர் மறுத்தாரே! இது உலகறிந்த உண்மையாயிற்றே! ஆகவே இந்தப் போக்கில் ஒரு புதிய நிலைமை ஏற்பட்டிருப்பதைப்பற்றி எனக்கு மகிழ்ச்சிதான். இதில் மேலும் முன்னேறி நடவடிக்கை எடுக்க வேண்டும்.

இந்த சந்தர்ப்பத்தில் இதை நாங்கள் மட்டும் கூறவில்லை. முக்கியமான குறிப்பிடத்தக்க மூன்று பேர்கள் மார்ச் 20ம் தேதி கையெழுத்திட்டு ஒரு அறிக்கை விடுத்துள்ளார்கள். திருவாளர் கே.எம்.கரியப்பா, முன்னுள்பாகிஸ்தான்ஹைகமிஷனர் ஸி.ஸி.தேசாய் ஐ.சி.எஸ். காரரான ஹெச்.பி. கபூர் ஆகியோர் ஒரு கூட்டறிக்கை விடுத்துள்ளனர். சீனுவுடனும் பாகிஸ்தானுடனும் உள்ள நமது உறவுகளைப் பற்றி புனராலோசனை செய்ய நாம் முன்கை எடுத்து முயற்சி செய்ய வேண்டுமென்று அவர்கள் கோரியுள்ளனர். இன்னும் பல விஷயங்களைப் பற்றியும் இவர்கள் குறிப்பிடுகிருர்கள். அதற்குள் நான் போக விரும்பவில்லை. 'என்னைத் தொடாதே' 'இருந்த இடத்திலேயே இருப்பேன்' 'எதையும் செய்ய மாட்டேன்' என்ற போக்குகளிலிருந்து நாம் மாறவேண்டும் என்று கூறிக்கொள்கிறேன்.

## அன்றுபட்ட காயம்!

முப்பது ஆண்டுகளுக்கு முன்பு அந்நியத் துணிகள் பகிஷ்காரம் நடந்தபோது நாங்கள் எல்லாம் அடிபட்டோம். அந்த காயம் இன்னும் இருக்கிறது. எது அந்நியத் துணி எது சுதேசி என்பதற்கு சத்தியாக்கிரகம் செய்தவர்களுக்கு வழிகாட்டும் காங்கிரஸ் கட்சி சார்பில் சுதேசி போர்டு ஒன்று இருந்தது. அதற்கு பண்டித மோதிலால் நேரு தலைவர். அன்று பக்கிங்ஹாம் கர்னுடிக் மில் முதலாளியான அந்த ஆங்கிலேய முதலாளி மறியல் செய்வோரிடமிருந்து தன்னைப் பாதுகாத்துக் கொள்வதற்காக தனக்கும் சுதேசி சர்டிபிகேட் தரும்படி கேட்டார். அதற்கு மோதிலால் நேரு மறுத்துவிட்டார். "அது அந்நிய மூலதனம்" என்று திட்டவட்டமாகச் சொன்னுர். எனவே "கொடுக்க முடியாது" என்ருர்.

(8ம் பக்கம் பார்க்க)

## அராபிய மக்களைக் காட்டிக் கொடுத்த ஐ.நா. தீர்மானம்!

"எகிப்தின் பிரதிநிதி அமெரிக்கா ஐ. நா.வில் கடைப்பிடிக்கும் தந்திரோபாயத்தை குறிப்பிட்டார். ஐ.நா. பாதுகாப்புச் சபையில் வேண்டுமென்றே திட்டமிட்டே அமெரிக்கப் பிரதிநிதி யுத்தநிறுத்த தீர்மானத்தை இஸ்ரேல் மீறுவது பற்றி தீர்மானம் வரும் ஒவ்வொரு சமயத்திலும் பல சால்ஜாப்புகள் கூறி தகவல்கள் கிடைக்கவில்லை என்று கூறி எந்தத் தீர்மானமும் எடுக்கப்பட முடியாமல் செய்து வருகிருர். பாதுகாப்புச்சபை யுத்தநிறுத்தத் தீர்மானம் நிறைவேற்றி விட்டது என்று சொல்லி ஆக்கிரமிப்பிற்குள்ளான நாடுகளின் கைகளைக்கட்டிவிட்டு இஸ்ரேல் எவ்வளவு தூரம் சிரியாவுக்குள் நுழைந்து அதிக இடங்களைப் பிடித்துக் கொள்ள முடியுமோ அவ்வளவு இடங்களைப் பிடித்துக் கொள்ள வசதி அளிக்கும் முறையில் அமெரிக்கா நடந்து வருகிறது என்று எகிப்தியப் பிரதிநிதி குற்றம் சாட்டினுர்.

யுத்தத்தை நிறுத்தச் சொன்ன நாடுகள் அதை மீறிய இஸ்ரேல் மீது எடுத்த நடவடிக்கை என்ன?

அமெரிக்க பிரிட்டிஷ் கைப்பாவையான இஸ்ரேலிடம் மண்டியிட்டு வேண்டிக்கொள்ளும் மற்ருெரு தீர்மானம் அவ்வளவு தான்.

# இஸ்ரேலின் ஆக்கிரமிப்பு யுத்தம்!

# சுதந்திரா, ஜனசங்கக் கட்சிகளின்

# முகமூடிகள் கிழிந்தன!

அரபு நாடுகளான ஐக்கிய அரபுக் குடியரசு, ஜோர்டான் போன்ற நாடுகள் மீது இஸ்ரேல் திடீர் தாக்குதல் நடத்திய செய்தி கேட்டதும் பார்லிமெண்ட் வட்டாரத்தில் பரபரப்பு ஏற்பட்டது. எல்லா எதிர்க்கட்சிகளும் சர்க்காருக்கு கவன ஈர்ப்புப் பிரேரணைகளும், கடிதங்களும் அனுப்பின. அதன் மீது பிரதமர் இந்திராகாந்தியவர்கள் ஜூன் 6ல் பார்லிமென்டில் ஒரு அறிக்கைவெளியிட்டார். அவர் பேசும்போது கவலை தரும்படியான மேற்கு ஆசிய நிலைமைகளைக் குறிப்பிட்டு கிடைத்துள்ள தகவல்களைப் பார்த்தால், அரபு நாடுகளின் மீது இஸ்ரேல்தான் வலுத் தாக்குதல் துவக்கி யுத்தமாக மாற்றியுள்ளது என்பதில் சந்தேகமில்லை என்றார்.

இந்த யுத்தம் உடனே நிறுத்தப்படாவிடில் ஒரு உலக யுத்தமாகவும் மாறலாமென்றார். இஸ்ரேலின் தாக்குதலுக்கு, காஸாவில் ஐ.நா. சார்பில் பணியாற்றிவந்த இந்திய ஜவான்கள் பலர் பலியானதையும், காயமடைந்ததையும் குறிப்பிட்டு அவர்களின் குடும்பத்தினருக்கு ரூ. 5000 வீதம் உடனடி உதவியாக அனுப்பப்படுவதாயும் கூறி இஸ்ரேலின் இந்த பேடித்தனமான தாக்குதலைக் கண்டித்தார். அரபு நாடுகளுக்கு நமது ஆதரவைத் தெரிவித்தார். இறந்த ஜவான்களுக்கு சபை எழுந்து நின்று மரியாதை செலுத்தியது.

**சுதந்திராக் கட்சியின் முகமூடி கிழிந்தது**

சுதந்திராக் கட்சி சார்பில் என்.ஜி. ரங்கா இவ்வறிக்கை மீது பேசும்போது, இந்த நெருக்கடியில் அரசாங்கம் திருப்திகரமான முறையில் தேசத்தின் கருத்தை பிரதிபலிக்குமென்று எண்ணியதாகவும்ஆனால்துரதிருஷ்டவசமாக அப்படிச் செய்யாமல் யார் இந்த சண்டையை முதலில் ஆரம்பித்தார்கள் என்று ஒரு தரப்பைக் குறைகூறிப் பேசியது சரியல்ல என்று இந்திரா காந்தி அவர்களின் பேச்சைக் குறை கூறினர். சுதந்திரா கட்சியின் இஸ்ரேல் ஆதரவு, அராபிய எதிர்ப்பு மனோபாவம் வெளிப்பட்டது.

**ஜனசங்கத்தின் சீற்றம்**

ஜனசங்கத்தின் தலைவர் அட்டல் பீகாரி வாஜ்பேய் மிகக் கோபத்தோடு பேசினார். அரபு நாடுகளுடன் சினேகமாக இருக்க விரும்புகிறோம். அதே சமயத்தில் இஸ்ரேலை அழிப்பதுதான் எண்ணமென்றால் நாம் அவர்களுடன் சேரமுடியாது என்றும் அவ்வாறு செய்யவிடமாட்டோம் என்றும் பிரதம மந்திரி கூறவேண்டும் என்றார். இஸ்ரேல்தான் யுத்தத்துக்கு காரணமென்பதற்கான விவரங்களை பிரதம மந்திரி பார்லிமென்ட் முன் சமர்ப்பிக்க வேண்டுமென்றார்.

தி.மு.க. சார்பில் அன்பழகன் பேசும்போது இப்படிப்பட்ட ஒரு மாபெரும் நெருக்கடியில், எல்லோரது கருத்துக்களையும் அறிந்து கருத்து வேற்றுமை தோன்றாத முறையில் பிரதமரது அறிக்கை இருந்திருக்க வேண்டும். நம் நிலைபாடு மேலும் கோஷ்டி சேராததாக இருக்க வேண்டும். இந்த நெருக்கடி பற்றி நாங்கள் எந்த முடிவும் எடுக்கவில்லை என்றார்.

பிறகு வலதுசாரிகள் சார்பில் டாங்கே பேசினர். டாங்கே கூறும்போது, அராபிய மக்களின் சுதந்திர இயக்கத்தை முறியடிக்க பிரிட்டிஷ், அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் உண்டாக்கிய இஸ்ரேல் நாடு என்று எடுத்துக்காட்டி அரபு மக்களுக்கு ஆதரவு தெரிவித்தார்.

**ராமமூர்த்தி**

கம்யூனிஸ்ட் கட்சி (மார்க்சிஸ்ட்) சார்பில் ராமமூர்த்தி அவர்கள் பேசினர், மேற்கு ஆசிய நாடுகளில் குறிப்பாக ஏகாதிபத்தியவாதிகளின் சதிவேலைகள் பற்றி நாமறிவோம். அராபிய மக்களின் ஏகாதிபத்திய எதிர்ப்புப் போராட்டத்தினால், தங்கள் ஆதிக்கத்தில் உள்ள எண்ணெய் வளங்கள் யாவும் போய்விடுமோஎன்ற பீதியால் அவர்கள் அதைச் செய்கிறார்கள். இதனால் இஸ்ரேல் அராபிய நாடுகளோடு சமாதானத்துக்கு வராமல் ஏகாதிபத்திய வாதிகள் தடுத்து இந்த சண்டை உருவாகியுள்ளது. ஆதலால் ஏகாதிபத்திவாதிகளை அங்கிருந்து விரட்ட அராபிய உலகத்துக்கு நாம் ஆதரவளிப்பது அவசியமாகும் என்றார்.

மற்ற கட்சித் தலைவர்களும், பலர் பேசியபின் இந்திரா காந்தியின் அறிக்கை ஏற்றுக் கொள்ளப்பட்டது.

சுதந்திரா ஜனசங்கம் போன்ற கட்சிகள் கோஷ்டி சேராத நாடு இந்தியா என்ற பெயரைக் கூறி, ஏகாதிபத்திய கைப்பாவையான இஸ்ரேலின் தாக்குதலை எதிர்த்து நிற்கும் அரபு நாடுகளுக்கு ஆதரவளிப்பதைத் தடுக்க ஆசைப்பட்டதை வெளிப்படையாக பார்க்க முடிந்தது. இதே விஷயத்தின் மீது அடுத்த நாள் வெளிநாட்டு மந்திரி சாக்ளா அவர்கள் ஒரு அறிக்கை வெளியிட்டபோது இக்கட்சிகள் பெரும், கூச்சலையும் குழப்பத்தையும் பார்லிமென்டில் ஏற்படுத்தினர்கள்!

அப்போது இஸ்ரேல் யுத்தத்தில் வெற்றி பெற்றதாக அவர்களில் சிலர் பாராட்டிப் பேசி, இந்திய சர்க்கார் இஸ்ரேல் சர்க்காரை அங்கீகரித்து உறவு கொள்ளுமா? என்று கூட கேட்டார்கள். பிரிட்டிஷ் அமெரிக்க ஏகாதிபத்தியவாதிகள் அரபு நாடுகளுக்கு எதிராக தங்களது கப்பற்படை, விமானப் படைகள் இஸ்ரேலை ஆதரித்து மத்திய தரைக் கடலில் நிறுத்தி வைத்துள்ளது பற்றி ஒரு கண்டன வார்த்தைகூட அவர்களிடமிருந்து வரவில்லை என்பதும் குறிப்பிடத்தக்கதாகும்.

★

## நாடாளு மன்றத்தில் கேள்விகளும் பதில்களும்

பார்லிமெண்ட் கூட்டத்தில் நமது கட்சித் தோழர்கள், மக்கள் பிரச்னைகள் மீது பல கேள்விகளைக் கேட்டு வருகிறார்கள். அவற்றுக்கு அளிக்கப்படும் பதில்கள் பற்றியெல்லாம் பல பத்திரிகைகளில் விவரங்கள் பிரசுரிக்கப் படுவதில்லை.

**போனஸ் பிரச்சினை மீது முக்கூட்டுக் கமிட்டி**

சென்ற 7-6-67ல் தோழர்கள் கே. ரமணி, எம்.பி. உமாநாத், எம்.பி. முகம்மது இஸ்மாயில் (வங்கம்) கீழ்க்கண்ட கேள்விகளை தொழிலாளர் மந்திரியவர்களிடம் கேட்டார்கள்.

(அ) போனஸ் பற்றி முத்தரப்புக் கமிட்டி அதன் வேலைகளை முடித்து விட்டதா ?

(ஆ) முடித்திருந்தால் முடிவுகள் என்ன ?

(இ) முடிக்காமலிருந்தால் அக்கமிட்டி தன் அறிக்கையை எப்போது சர்க்காருக்கு சமர்ப்பிக்கும்.

இக்கேள்விகளுக்கு மந்திரி எழுத்து மூலமாகத் தந்துள்ள பதில்களாவன:—

ஸ்டாண்டிங் லேபர் கமிட்டியினால் ஒருஇருசாரார் கமிட்டி அமைக்கப்பட்டது 25-10-66 சுப்ரீம் கோர்ட் 1965ம் வருட போனஸ் சட்டத்தில் சில ஷரத்துக்கள் செல்லாதென்று தீர்ப்பளித்தது பற்றி எழுந்துள்ள சூழ்நிலைமையில் என்ன ஆலோசனைகள், மாறுதல்கள் செய்யலாமென்று பரிசிலத்தறிய அக்கமிட்டியிடம் கோரப்பட்டது. இக்கமிட்டி இரு தடவை கூடியது ஆயினும் ஒருமைப்பாடு காணவில்லை. ஆகவே, 10-5-67ல் இவ்விஷயத்தை ஸ்டாண்டிங் லேபர் கமிட்டிக்கு அறிவிக்கப்பட்டுள்ளது.

**அசோசியேட்டட் சிமிண்ட் கம்பெனி போனஸ கொடுப்பது பற்றி**

தோழர்கள் பி. ராமமூர்த்தி ஏ.கே. கோபாலன் இருவரும் கீழ்க்காணும் கேள்விகளைக் கேட்டனர்:—

(அ) ஏ.சி.சி. கம்பெனியில் தொழிலாளிகளுக்கு போனஸ் கொடுப்பது பற்றிய தகராறை விசாரிக்க தொழில் தகராறு சட்டத்தின் கீழ் ஒரு தேசிய தொழில் கோர்ட் நிறுவப்பட்டுள்ளதா ?

(ஆ) நிறுவப் பட்டிருந்தால் இதுவரையில் அந்தக் கோர்ட் வேலை எந்தஅளவு முன்னேறியுள்ளது ?

(இ) அதன் அறிக்கை எப்போது வரும்? இதற்கு தொழிலாளர் மந்திரி அளித்த பதில் கீழ் வருமாறு:—

(அ) தேசிய தொழில் கோர்ட் நிறுவப்பட்டுள்ளது.

(ஆ) சம்பந்தப்பட்ட தரப்பார் அறிக்கைகளை கோர்ட்டுக்கு சமர்ப்பித்துள்ளனர்.

(இ) வழக்கை சீக்கிரம் விசாரிக்க ஒரு தேதி நிர்ணயிக்க கோர்ட்டாரால் நடவடிக்கை எடுக்கப்பட்டு வருகிறது.

நமதுவிசேஷ நிருபர்

## நன்கொடை

செங்கோட்டை கட்சி உறுப்பினர் கே. சுப்பிரமணியனுக்கும் கோமதி அம்மாளுக்கும் ஜூன் 11-ம் தேதி நடைபெற்ற திருமணத்தின் நினைவாக அனுப்பிய நன்கொடை ரூ 5-ம் கிடைத்தது.

பள்ளிக் கூடத்தனூர் தோழர் கே. அழகர்சாமி வீரம்மாள் திருமணத்தின் நினைவாக அனுப்பிய நன்கொடை ரூ 5-ம் கிடைத்தது.

அச்சிஜவரம் தோழர் சி. கே. சின்னசாமிக்கும் குணசுந்தரிக்கும் ஜூன் 12-ம் தேதி நடைபெற்ற திருமணத்தின் நினைவாக அனுப்பிய ரூ 2-ம் கிடைத்தது.

லட்சுமி நாயக்கன் பட்டி தோழர் கே. ஜெயராமன் —கே. வி. இந்திராணி திருமணத்தின் நினைவாக அனுப்பிய ரூ 10-ம் கிடைத்தது.

## நெய்வேலி நிலக்கரி தொழிலாளர் ஸ்டிரைக் நோட்டீஸ

நெய்வேலி நிலக்கரி கார்ப்பரேஷனைச் சேர்ந்த தொழிலாளர்கள் வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுத்துள்ளனர்

போனஸ், கிராக்கிப்படி இணைப்பு, கிராஜுட்டி, வைத்திய வசதி, வீடுவசதி முதலிய 19 கோரிக்கைகளை முன் வைத்து கடந்த 6-மாத காலமாக தொழிலாளர்கள் போராடி வந்தும் நிர்வாகம் செவிசாய்க்கவில்லை.

இந்நிலையில் என்.எல்.சி. சங்கம், நிலக்கரி சுரங்கதொழிலாளர் சங்கம், நிலக்கரிசுரங்க தொழிலாளர் முன்னேற்ற சங்கம் ஆகிய 3 சங்கங்களின் பிரதிநிதிகள் அடங்கிய ஆக்ஷன் கமிட்டி அமைக்கப்பட்டது. அதன் சார்பில் ஜூன் 5ம் தேதி வேலை நிறுத்த நோட்டீஸ் கொடுக்கப்பட்டுள்ளது.

(7ம் பக்கத் தொடர்ச்சி)

ஆனால், இன்றைக்கு நடப்பதென்ன? அர்ஜுனன் கையில் காண்டீபத்தை வைத்துக் கொண்டு துரியோதனாதிகளை பார்த்து நடுநடுங்கியதைப் போலடாட்டாக்களையும், பிர்லாக்களையும் சிங்கானியாக்களையும் பார்த்து இந்த மந்திரிகள் தொடை நடுங்குகிறார்கள்.

தாராகேஸ்வரிசின்ஹா: அங்கு பீஷ்மாச்சாரியார்கள், பிதாமகர்கள் இருக்கிறார்களே!

பி. ராமமூர்த்தி : இத்தகைய நபர்களுக்கு எதிராக இந்த நாட்டு மக்கள் ஒருநாள் எழுச்சியுற்று சரியான நடவடிக்கை எடுக்கத்தான் போகிறார்கள்,

டைம்ஸ் பிரஸ் (153, டாக்டர் நடேசன் ரோடு சென்னை—5)ல் அச்சிட்டு வெளியிடுபவர் ஆசிரியர் : கே. முத்தையா